உ

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.




| தொகுதி | குரோதன ௵ மாசி ௴ ௧௳ | பகுதி |
|---|---|---|
| 11 | 1926 ௵ பிப்ரவரி ௴ 12௳ | 8 |


## கடவுள் வணக்கம்.

பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
பஞ்சுபடு சொல்ல னிவனைப்
பார்மினோ பார்மினோ வென்றுசபை கூடவும்
பரமார்த்த மிதுவென் னவே
ஆடாது மாடிநெஞ் சுருகிநெக் காடவே
யமலமே யேக மேயெம்
ஆதியே சோதியே யெங்குநிறை கடவுளோ
யரசே யெனக்கூ விநான்
வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு
வாடா வெனக்க ருணைநீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாவிந்த
வன்மையை வளர்ப்பித் ததார்
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே
தேடரிய சத்தா கியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோம யானந் தமே. (1)

---

நேற்றுளா ரின்று மாளா நின்றன ரதனைக் கண்டும்
போற்றிலே னின்னை யந்தோ போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலே னகண்டா னந்த வண்ணலே யவாவின் மாயைச்
சேற்றிலே யின்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறிய னேனே. (2)

---

போத மென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிருளாம்
தீதி லாவினைக் கெடுத்திரு டேடவுஞ் சிக்கா
தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும். (3)

---

## அரும்பொருள் விளக்கம்.

1. பெறலரும் பிறவியாகிய மானிடப்பிறவியை எய்தப்பெற்ருேர், அஃதுள்ளபோதே ஜனன மரண ரகிதத்தை புண்டுபண்ண வல்ல முத்தி யின்பத்திற் காதாரமான வழியைத் தேடிக்கொள்ளவேண்டும். அம்முயற்சி யின்றிக் கேவலம் "ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி, அன்னை யத்த னென் புத்திரர் பூமி, வாசவார் குழலாளென்று மயங்கி" மேலும் மேலும் பிறப்பிறப்பிற் கட்டுண்டுழல்வதால் மக்களாய்ப் பிறந்தவர்க்கு வரும் பெருமை சிறிது மின்ரும்.

"ஈசனை யிருத்துறும் இதயத் தோர்பொருள்
ஆசையை யிருத்துதல் அந்த ணுளர்தாம்
வாசமுற் றிடுமொரு மனையிற் புன்ருழில்
நீசரை யிருத்துதல் நிகர்க்கு மென்பரால்"

என்று நீதிநூல் கூறுகின்றது. இம்முறைமையைத்தழுவி இப்பாடலின் கண், ஆசிரியர், தாம் கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்றது, இறைவ னுடைய கல்யாண குணங்களை வாயார வாழ்த்துதற்கும், அவனருளிய கரசரணங்களைக்கொண்டு ஆனந்த கீர்த்தனஞ் செய்வதற்குமே யாதலின் அவ்வாறு பாடி யாடப்புகுந்த தம்மை, நவரசாலங்கார மமையச் செய்யு ளியற்றவல்ல அளவற்ற சமயத்தினர் "இவனென்ன பஞ்சுபோல மிகவும் நொய்தாய்ப் படிக்கும் சொற்களையுடைய எளிழ; இவனுடைய கல்வித் திறத்தைப் பாருங்கள்" என்று கூடிக் கூடி எளனஞ் செய்கிருர்கள் என் றும், அதைக்கண்டு சகியாத தாம் 'ஆதியே, சோதியே, எங்குநிறை கட வுளே, அரசே' எனப் பற்பலவிதமாக இறைவனைத் துதிசெய்து முகம் வாடி நிற்கவும், இறைவன் தம்பால் கருணைபுரியாது கடின சித்தங் கொண்டிருத்தலின், அத்தகைய சித்தத்தை வளர்ப்பித்ததார்? என்று இறைவனைக் கேட்க நேர்ந்ததென்றும், பரிபக்குவம் எய்தப்பெருமையின், கருணை கனியவில்லையோ? என்றும் முறையிடுகின்ருர்.

பாடாது பாடி படித்து=பாடாததெல்லாம் பாடிப் படித்து.
ஆடாதும் ஆடி=ஆடாதவகையாய்க் கூத்தாடி.
நெக்குஆட=நெகிழ்ந்தாட.
வாடாது வாடும்=ஒருவரும் வாடாதவண்ணம் வாடுகின்ற.
சங்கேதமா=நியமமாக.
தேடாது தேடுவோர்=தற்போதத்தை முன்னிடாது திருவருளையே முன் னிட்டுத் தேடுவோர்.
தேட்டுஅற்ற=தேடுதலில்லாத.
தேட்டம்=திரவியம்.

2. நேற்றிருந்தார் இன்றில்லை என்பதைப் பிரத்தியட்சமாகக் கண் டும் இறைவனே! உன்னை வணங்காமல் அருமையான காலத்தை வீணே

கழிக்கலுற்றேன். அங்ஙனம் கழிப்பதுபற்றி இனி, சகிக்கக்கூடவில்லை. அகண்ட சுகத்தை விளைவிக்கும் பெரியோனே! சிறியேனாகிய யான் அளவு கடந்த மாயையாகிற சேற்றிலே இன்னம் வீழ்ந்து துன்பத்தை யனுபவிக்கவோ விடுத்தனை என்று இச்செய்யுளில் கூறுகின்றார்.

"தொருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

என்று நாயனாரும்,

"நேற்றிருந்தா ரின்றுவெந்து நீறானார்—பாற்றெளிக்க
எல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம்"

என்று பட்டினத்தாரும் கூறுவது கவனித்தற் குரியதாம்.

ஆற்றிலேன்—சகித்திலேன்.

திளைத்தல்=அனுபவித்தல்.

3. ஒளிக்கும் இருளுக்கும் இடம் ஒன்றாயிருந்தும் ஒளி மேலிட்ட காலத்தில் இருள் நில்லாததுபோல, ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் இடம் ஒன்றாயிருந்தும், ஞானமேலிட்டகாலத்தில் அஞ்ஞானம் நில்லாதென்பார் 'போதமென்பதே விளக்கொவ்வும் அவித்தை பொய் யிருளாம், தீதிலா விளக்கெடுத் திருள்தேடவுஞ் சிக்கா' என்றார்.

போதம்=அறிவு.

அவித்தை=அஞ்ஞானம்.

எம்பிரான்சுருதி=பகவானருளிய வேதம்.

---

# ஆனந்தபோதினி

குரோதனஹு மாசிமீ கஉ

## ஆட்கவரும் அற்புத யந்திரங்கள்.

இக்காலத்தில், பார்ப்போர் அதிசயிக்கத்தக்க அநேகம் யந்திரங்கள் தோன்றி யிருக்கின்றன. அவற்றுள் ஒவ்வொன்றும் மனிதர் பிரமிக்கத்தக்க வேலைகளைச்செய்து வருகின்றன: ரெயில்வே இன்சின், வேறெதனாலும் இழுத்துச் செல்ல முடியாத பாரங்களையும், பல்லாயிரக் கணக்கான ஜனங்களையும் இழுத்துச் செல்கின்றது;

பாரத்தைத் தூக்கும் யந்திரம் மலைபோன்ற பெரும் பாரப் பொருளை யும் கிளப்பிவிடுகின்றது. பறக்கும் யந்திரங்கள் பற்பல மனிதர்களை யும் பொருள்களையும் தாங்கி மேலே பறக்கின்றன. மோட்டார் யந்திரங்கள், யமன்கள் உயிர்களைக் கொண்டுசெல்வதுபோல மனி தரை நூற்றுக்கணக்கான மைல்களுக் கப்பாலுள்ள விடங்களுக்கு விரைவில் கொண்டுபோய் விடுகின்றன. இவற்றைப்போலதொழில் செய்வன இன்னும் எத்தனையோ உண்டு. அவை பலர்க்கும் தெரிந் தனவே. இந்த யந்திரங்களெல்லாம் அதிசயிக்கத் தக்கனவே. எனி னும் இவற்றைக்காட்டிலும் அற்புத யந்திரங்கள் சில உலகத்தில் தோன்றி யிருக்கின்றன. அவை யெவையெனில், மனிதரைக் கவர் ந்து செல்லும் யந்திரங்களே. இவை நெடுங்காலத்துக்கு முன்னரே சிலோன், பர்மா, மலேயா, ஆப்பிரிக்கா முதலிய இடங்களுக் குபயோகமாக இந்தியாவில் தோன்றி இதுகாறும் அயர்ச்சியின்றி வேலைசெய்து வருகின்றன. இவை 'இரும்பைக் காந்தம் இழுக்கின்ற வாறுபோல்' மனிதரை யிழுக்கும் மகா சக்தியுடையவை. ரெயில் யந்திரம் முதலியவை, மனிதர் குறித்தவிடத்தில் அவர்களை யிழுத் துக்கொண்டுபோய்த் தள்ளியும், அவர்களுக் கனுகூலமான வேறு பல வேலைகளைச் செய்தும் சகாயம்புரியக் கூடியவை. ஆளைக்கவ ரும் யந்திரங்களோ தங்கள் நோக்கம்போல மனிதரை யிழுத்துக் கொண்டுபோய்த் தங்களிடமே விடாயல் வைத்துக்கொண்டு அவர் களாலாம் பயன்களையெல்லாம் அடியோடு விழுங்கி அவர்க் கெந் நாளும் அபாயத்தை உண்டாக்கக் கூடியவை. இவைகளிடம் சிக் கிய ஆட்கள் மீளுவ தருமை. இன்னும் இவைகள் தம்மிடம் சிக்கு வோர்பாற் பயன்களைக் கவர்ந்துகொண்ட பின்னர் அவர்களைத் தூரதேசங்களிலுள்ள நெருக்கடியான விடங்களில் தள்ளியும் விடு கின்றன.

இந்த யந்திரங்கள் எவையெனில் மனிதரை ஏமாற்றி அன்னிய நாட்டிற்குக் கொண்டுபோயும் அனுப்பியும் ஆபத்திற் சிக்கவைக்கும் வன்கண்மை வாய்ந்த மனிதர்களே. இவர்கள் மனிதர்களே யெனி னும், அறிவின்றிப் பிறர் வயப்பட்டுத் தொழில் செய்யும் யந்திரங் களைப்போன்று தூர்க்குண வயப்பட்டு இரக்கமும் நீதியும் எட்டுணையு மின்றித் தீத்தொழில் புரிபவராதலின் இவர்களை அறிவற்ற அஃ றிணைப் பொருள்களாகிய யந்திரங்களாக உருவகப்படுத்திக் கூறுவது மிகப் பொருத்த முடைத்தாம். இந்த யந்திரமாக்கள் எவரெனில்,

சிலோன் காப்பி தேயிலைத் தோட்டங்களுக்குக் கூலியாட்கள் சேர்க்கும் *கண்காணிமார்களும், மலாய் நாட்டிலுள்ள ரப்பர்த் தோட்டங்களுக்கு வேலையாட்கள் சேர்க்கும் மேஸ்திரிகளும், பர்மிய நாட்டிலுள்ள விவசாயம் முதலியவற்றிற்குப் பணியாளர் சேர்க்கும் துணிவாளர்களும், இந்நாடுகளுட் சிலவற்றிற்கு வேறு பற்பல தொழில்கள் செய்யும் ஆட்கள் சேகரிக்கும்கோட்காரரும், தென்ஆப்பிரிக்காவுக்குக் கூலியாட்களைப் பிடித்துத் தள்ளிவிடும் தாகினரும், வேறு பலருமாவர்.

இவர்கள் மனிதரைக் கவர்ந்துசெல்லும் தந்திரங்கள் மிக்க விநோதமா யிருக்கும்: சிலோனில் சொந்தத் தோட்டங்கள் வைத்திருக்கும் பூமிக்குடையவர்களிடத்தில், தோட்டவேலைகளைக் கூலியாட்களின்மூலம் நிறைவேற்றுதற்கென இந்தியர்களாகிய கண்காணிமார்கள் நெடுங்காலமாக ஏற்பட்டிருக்கிறார்கள். இவர்களுக்குத் தோட்டத்துக்குடையார் சம்பளம் கொடுப்பதுமுண்டு; வேலைகளைக் கண்டிராக்ட் கொடுப்பதுமுண்டு; கூலியாட் சேர்ப்பதற்குக் கமிஷன் அளித்தலுமுண்டு; கூலியாட்களின் கூலியிலும் சிறிது பாகமுண்டு. இந்தவகைகளில் இவர்கள் மிக்க வருவாய் பெறுவார்கள். இவர்களிடம் கூலியாட்கள் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாயிருக்கின்றார்களோ அவ்வளவுக் கவ்வளவு பணம் அதிகமாகச் சேரும். அதனால் ஆட்பிடிக்கும் அக்கரை இவர்களுக்கு அதிகமா யேற்பட்டு விடுகிறது. ஆகவே இவர்கள், 'ஆட்பார்த்துழலும் அருளில் கூற்'றைப்போல இந்தியநாட்டில் வந்து கூலியாட்களைச் சேர்க்கமுயன்று நாடுகளிலும் நகரங்களிலும் புகுந்து வறுமையால் மனம் நொந்தவர்களையும், கஞ்சிக்கலையும் பஞ்சைகளையும், மனைவிமீது வெறுப்புற்றுத் திரியும் கணவனையும், கணவன்மீது வெறுப்புற்றுத்திரியும் மனைவியையும், தாய் தந்தையர்மீது கோபங்கொண்ட பிள்ளைகளையும், புத்திரன்மீது வெறுப்படைந்த தகப்பனையும், இருப்பதைவிட்டு மேலும் சம்பாதிக்கவேண்டுமென்று பேராசைகொண்ட பித்தர்களையும் கண்டு, "ஐயோ! நீங்களேன் இங்கிருந்து கஷ்டப்படுகிறீர்கள்? என்னுடன் சிலோன் தோட்டத்திற்கு வந்துவிடுவீர்களானால், அடடா! என்ன செல்வம்! என்ன சுகம்! என்ன சாப்பாடு! பணத்திலேயே கிடந்து புரளலாம்; பழத்திலேயே மூழ்கி எழுந்திருக்கலாம்; பாலிலேயே தலைமுழுகலாம்; நெய்யிலேயே முகங்கழுவலாம்;

* கண்காணி=மேல் விசாரிப்புக்காரன்.

பட்டாடையால் கால் துடைக்கலாம்; பஞ்சணையிற் படுக்கலாம்; கற்பகத்தரு, காமதேனு, சிந்தாமணி எல்லாம் அங்கேதான்" என்று சொல்லிக், கையில் இரண்டு மூன்று ரூபா கொடுப்பார்கள். பலவகையாலும் மனம் வெம்பிக்கிடந்த அவர்கள் செவியில் இந்த ஆசை வார்த்தைகளும் கையில் காசும் சேர்ந்தவுடனே சுவர்க்க இன்பத்தைப் பெற்றவர்களைப்போல மகிழ்ந்து கண்காணிமார்களைப் பின்தொடர்ந்து விடுவார்கள். கண்காணிமார்கள், அவர்களுக்கு நல்ல வஸ்திரங்களும், உணவுகளும், தின்பண்டங்களும் வாங்கிக்கொடுத்து அவர்களைத் திரட்டிக் கூட்டங்கூட்டமாக ரெயிலிலும் கப்பலிலுமேற்றிக்கொண்டுபோய்த் தோட்டங்களில் இறக்கிவிடுகிறார்கள். இன்னும் இவர்கள், நல்ல நிலையிலிருப்பவர்களையும் இங்ஙனம் ஆசை வலை வீசிக் கொண்டுபோய்விடுவதுமுண்டு. இவ்வாறு சிலோன் கண்காணிகளால் கவர்ந்துகொண்டு போகப்படும் ஆட்கள் மீட்சி பெறுவது அருமை. அவர்கள், இவர்களை அழைத்துக்கொண்டு போனவுடன் இவர்களுக்குச் செலவிட்ட தொகைகளை ஒன்றுக்குப் பத்தாகக் கணக்காக்கி இவர்கள்மீது தீராக் கடனுயிருக்கும்படி பற்றெழுதி வைத்துக்கொண்டு இவர்களிடம் வேலைவாங்கிக் கூலி கொடுத்து இவர்களுடைய கடன் தீராதிருப்பதற்கான உபாயங்களையே செய்துவருவார்கள். அதனால் இவர்கள் கடனுகிய சிறை வாய்ப்பட்டு ஆயுள்வரை அவர்களிடம் உழைத்துத் தங்கள் காலத்தைத் தொலைப்பார்கள். இந்தக் கூலி ஜனங்கள் அங்கே அடையும் கஷ்டமோ சொல்லி முடியாது; அதைப்பற்றி யெழுதப்புகின் அது மிக விரிவெய்தும். இந்தக் கஷ்டங்களைச் சகிக்கமுடியாமல் சில கூலிக்காரர்கள் 'கானவர் வலையிற்பட்டுக் கைதப்பியோடு மான் போல்' அந்தக் கண்காணிகள் கையினின்றும் தவறியோடிவந்து விடுவதுமுண்டு. அப்படிப் பயந்தோடி வந்தவர்களையும் அவர்கள் விடமாட்டார்கள். உடனே வாரண்டு எடுத்துவந்து பிடித்துக் கொண்டு போய்விடுவார்கள்.

மலாய்நாட்டு ரப்பர்த் தோட்டங்களுக்குக் கூலியாள் சேர்க்கும் மேஸ்திரிகளுக்கு நல்ல கமிஷன் கிடைக்கும். அதன்பொருட்டு அவர்கள் மிக்க சுறு சுறுப்புடன் வேலைசெய்யத்தொடங்கி இந்திய நாட்டில்—முக்கியமாகத் தென்னுட்டில்—கிராமங்கள் தோறும், நகரங்கள் தோறும் புகுந்து சிலோன் கண்காணிகளைப்போலவே பேதை மாந்தர்களை ஏமாற்றித் திரட்டிக்கொண்டுவந்து நாகபட்டி

னம் முதலிய துறைமுக நகரங்களில் அவர்களைக் கப்பலேற்றிக் கொண்டு செல்வதற்கென அமைந்திருப்போரிடம் தள்ளிவிட்டுத் தங்களுக்குக் கிடைக்கவேண்டிய தாகு சம்பளத்தைக் கைப்பற்றிக் கொண்டு போய்விடுவார்கள். பின்னர் அக்கூலிமாக்கள், தங்களை அலைக்கடலுள் உய்ப்போர்களால் கப்பலேற்றப்படுகின்றனர். அங்ஙனம் அவர்கள் கப்பலேறுங்காலத்தில் அடையும் அல்லல்களைப்பற்றி முன்னொரு சமயம் நம் போதினியில் வரைந்திருக்கின்றோம். கப்பலில் அவர்கள் மிருகங்களைப்போல் நடத்தப்படுகிறார்கள்; சாப்பாட்டைப்பற்றிக் கூப்பாடுபோட வேண்டியவர்களா யிருக்கிறார்கள். அவர்களின் கப்பல் வாசம் நரகலோக வாசமே. இப்படி அவர்கள், கப்பலால் கொண்டு செல்லப்பட்டு அக்கரை சேர்ந்தவுடன் பினாங்குத் துறைமுகத்திலும் வேறுசில இடங்களிலும் அங்குள்ளவர்களால் இறக்கப்பட்டும், கலக்கப்பட்டும், தொழுவங்களில் அடைக்கப்பட்டும், நெருக்கப்பட்டும், பிரிக்கப்பட்டும் பற்பல தோட்டக்காரர்களால் ஆங்காங்கே கொண்டு போகப்படுகின்றனர். அப்படிக் கொண்டுபோகப்படுகின்றவர்கள், தங்கள் பிரயாணச் செலவு வகையில் தங்கள் தலைமீதேறிய கடனுக்காக ஒரு தவணைக்காலம்வரை தாங்கள் போய்ச்சேர்ந்த தோட்டங்களில் உழைத்துத் தீரவேண்டும்; அதன்பின்னர்த்தான் தங்கள் நோக்கம்போல் வேற்றிடங்கட்குத் தொழில்செய்யப் போதல் வேண்டும். அப்படி வெளியேறிய பின்பும் அவர்களுக்குப் போதிய வருவாய் கிடைப்பதில்லை. அதனால் அவர்கள் தொழிலிலோ கல்வியிலோ செல்வத்திலோ விருத்தியாதலின்றித் திரும்பித் தங்கள் நாட்டிற்கும் வரமுடியாமல் ஆயுளைக் கழித் தொழிகின்றனர்.

இனி வேறு பற்பல தொழிற்காரர்கள் ஏமாற்றப்படுவதை விரிக்கிற் பெருகுமாதலின் அவர்களில் மிக விநோதமான நாடகத் தொழிலாளர்களைமட்டும் எடுத்துக்கொள்வாம்: இரங்கூன் முதலிய சில நகரங்களில் வேடிக்கைத் தொழிலினாலேயே பெரும் பொருள் தேடவேண்டுமென்னும் பேரவாக்கொண்ட சிலர் இருக்கின்றனர். இவர்கள் நாடகங்களின்மூலம் அதிகப்பணம் சேகரிக்கவேண்டுமானால் நடிகர்களை ஏமாற்றவேண்டும். அங்ஙனம் ஏமாற்றுதற்குத் தங்களிடம் சில சாமார்த்தியமான ஆட்பிடிக்கும் யந்திரமாக்களை வைத்திருக்கின்றனர். இந்தியாவின் தமிழ்நாட்டிலும் சென்னை முதலிய இடங்களில் நாடகக்காரர்களைத் திரட்டி வெளிநாட்டிலிருந்து

வரும் யந்திரமாக்களிடம் தள்ளிவிடும் உதவியந்திரமாக்களுமிருக்கின்றனர். இக்காலத்தில் பெரும்பான்மையும் நாடகக்காரர்கள் கம்பெனியாகச் சேராமலும், ஒரு வாத்தியாரிடமோ, ஏஜண்டினிடமோ கட்டுப்படாமலும், தான் தோன்றிகளாய்—அதிலும் பெண்களே பிரதானமாய்—அங்கொருவரும் இங்கொருவருமாக வந்து ஓரிடத்திற்கூடி, ஒரு மனிதன் பல கீரை பிடுங்கிச் சட்டியில் போட்டு வேகவைப்பதுபோல், பல விகற்பந்தோன்ற நடிப்பது வழக்கமாயிருப்பதால், நாடக ஆட்கவரும் யந்திரமாக்களுக்கு மிக்க அனுகூலமாயிருக்கிறது. சிலோன், பர்மா, மலேயா முதலிய இடங்களிலுள்ள நாடக வருவாய்க்காரர்கள் தங்களுக்குத் தேவையானபோது நாடகப் பாத்திரங்களாகிய இந்தியக் காடைகளைக் கொண்டு வருவதற்குக் கைக் காடைகளாகிய மனிதர்களை அனுப்புகிறார்கள். அவர்கள் இங்கேவந்து இங்குள்ள தரகரின் உதவிகொண்டு நாடகத்தொழில் மலிந்துபோனதால் வரும்படியின்றித் திரியும் மிடியர்களாகிய நடிகர்களைக்கண்டு அவர்களிடம் ஆசைவார்த்தைகூறி அவர்கள் கேட்ட சம்பளம் தருவதாக ஒப்புக்கொண்டு கையில் கொஞ்சம் தொகை கொடுத்து அவர்களை மகிழ்வித்துக் கப்பலேற்றிக்கொண்டுபோய்க் குறித்த விடங்களில் இறக்கிவிடுகிறார்கள். அவ்விடங்களிலுள்ள ஏஜண்டுகள் மேளதாளத்துடன்வந்து அவர்களுக்கு மாலைபோட்டு மோட்டார் முதலியவற்றில் அவர்களை ஊர்வலமாக அழைத்துப் போய்த் தங்களுக்கு வசதியான விடங்களில் வைத்துக்கொண்டு அவர்களால் பல நாடகங்கள் நடத்தி அவற்றால் வருபவற்றையெல்லாம் பத்திரப்படுத்திக்கொண்டு உழைத்த அவர்களுக்கு உள்ள சம்பளத்தைக் கொடாமல் அவர்கள் உள்ளங் கலங்கச் செய்கின்றனர். அவர்கள் சம்பளத்தைக் கடிந்துகேட்டால் ஏஜெண்டுகளிடம் பெறுவது உதைதான். அவர்களிடம் சிக்கியபின் நாடகக்காரர்கள் படுந் துன்பங்கள் எண்ணில. எழுதப்புகின் அவை விரியும்; முடிவாகச் சொல்லுமிடத்துக் கூத்தர்கள் சாப்பாட்டுக்கு வழியின்றித் திரும்பி வரவும் முடியாமல் பல்லாண்டுகளை அவ்விடங்களிலேயே அல்லலுடன் கழிக்கிறார்கள். சிலர் அனாதைப் பிணமாயும் மாண்டொழிகின்றனர்.

இவ்வகுப்பாரன்றி ஆண்மக்களையும், பெண்மக்களையும் ஏமாற்றிப் புறநாடுகட்குக் கொண்டுபோய் விற்பாரும், வாங்குவோருமுண்டு. இங்ஙனம் விலைப்பட்டொழிவோர் கதி அதோகதிதான்.

தென்னாப்பிரிக்காவுக்குக் கூலியாட்கள் பிடிப்பவர்களோ, தங்கள் வருவாயை உத்தேசித்து ஆங்காங்கே பலரைப் பலவகைத் தந்திரங்களாலும் சேகரித்துக் கூலியாட்கள் தொகுத்தனுப்பு மிடங்களிற் சேர்த்து அங்குள்ளாரிடம் தாங்கள் பெறவேண்டியதைப் பெற்றுக்கொண்டு போய்விடுகின்றனர். பின்னர் அக்கூலியாட்கள் அவர்களால் தென்னாப்பிரிக்காவுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்படுகின்றனர். அங்குப்போய்ச் சேர்ந்து தொழில் நடத்த ஆரம்பித்த பின் அவர்கள் அடையும் இடர்ப்பாடுகள் எண்ணில. அவற்றைப் பல பத்திரிகைகளும், பொது நன்மைக் கருதுபவர்களும் மதிமிக்கோரும் பல சமயங்களில் கூறிவருவதால் உணரலாம்.

சிலர், "இவ்வாறு புறநாடுகளுக்கு நம்மவராலும் அன்னியராலும் கொண்டுபோகப்படும் எல்லோருமா இன்னலடைகின்றார்கள்? சிலராவது நலம் பெறுவதில்லையா?" என்று குறுக்குக் கேள்வி கேட்கலாம். அவர்கள் கேள்விப்படி எல்லோருமே துன்புறுவதில்லையென்பது உண்மைதான். சில புத்திமான்களும், சாமர்த்தியவான்களும், அவ்விடர்ப்பாடுகளினின்றும் நீங்கிச் சுயேச்சையடைந்து ஒன்றுமில்லாமல் திரும்பி ஜன்மபூமிக்கு வந்துவிடுவதுமுண்டு; ஊதியந்தேடிக்கொண்டு வருதலுமுண்டு; புறநாடுகளிலேயே செல்வான்களாய் விருத்தியடைந்து தங்கிவிடுதலுமுண்டு; சிலர், தங்களை ஏமாற்றியவர்களை ஏமாற்றிவிட்டுச் சொந்தநாட்டிற்குத் திரும்பியோடி வந்துவிடுவதுமுண்டு. ஆனால், இத்தகையினர் மிகக் குறைந்த அளவினரே. இவர்களிலும் புறநாடுகளிலேயே சொந்த முயற்சியால் பொருள்தேடி விருத்திபடைந்து தங்கியவர்களையும் அந்நாட்டினர் சும்மாவிடுவதில்லை. அடியோடு நெருக்கிக் கசக்கி யொழித்துவிடப் பார்க்கின்றனர். தென்னாப்பிரிக்காவிலுள்ள நம் இந்திய நண்பர்களின் நிலைமையே இதற்குதாரணமாகும். முதலில் நமமவர் பிறர் கூறும் தித்திப்பான மொழிகளால் மயங்கி அந்நாட்டிற் குடியேறி அரும்பாடுபட்டுவந்து நாளடைவில் சொந்த முயற்சியால் அவர்களுட் பெரும்பான்மையோர் விருத்தியடைந்துவிட்டனர். மேற்கூறியபடி இதரநாடுகளுக்கு வெவ்வேறுவகைத் தொழில்களிற் செல்வோரில் பெரும்பான்மையோர் வறுமையும் சிறுமையுமே அடைந்துவரினும் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றவர்களில் மட்டும் பெரும்பான்மையோர் அவ்விடத்திலேயே நிலைத்து மதியும் நிதியும் படைத்தவர்களாயினர். அங்ஙனமாகவே அந்நாட்டு வெண்மை

யர் அவர்கள்மீது பொருமைப் புழுக்கங்கொண்டு அவர்களை நெடு நாளாகப் படாதபாடுகள்படுத்தி வருகின்றனர். பொதுநலம் புரியும் மகான்கள் அவர்களுடைய ஆற்றெணுத் துயரை அகற்றுதற்கு அரும்பாடுபட்டு வருகின்றனர். இவ்விவரங்களையெல்லாம் பற்பல பத்திரிகைகளாலும் உணரலாம். அவற்றை ஈண்டு மெழுதுதல் மிகையாம்.

இந்நெருக்கடியானது முன் இருந்துவந்தபோதிலும் மனித சமூகத்தார் ஒவ்வொருவரும் தங்கள் அரிய சக்தியை மழுங்கச் செய்யும் அடிமைத்தனத்தினின்றும் நீங்கிச் சுதந்தரம் பெற்று இன்புற்றுவாழ முயலும் இக்காலத்திலும் இருப்பது தகாது. ஆதலின் நம் நாட்டவரனைவரும் இவ்விடுக்கண்களை யொழிக்க முயல்வதோடு நம்நாட்டில் நம்மவராகவேயிருந்தும் ஜனங்களைக் கவர்ந்து பிறரிடம் சிக்கவைத்துத் துன்புறுத்தும் யந்திரமாக்களின் சதிகளை ஒதுக்கவும் முன் வருமாறு எல்லாம்வல்ல இறைவன் தண்ணருள் புரிவானாக.

ஓம் தத் ஸத்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### சிஷ்ட விலக்கணம்.

(288-ம் பக்கத்தொடர்ச்சி)

மாற்சரியம், அகங்காரம், ஆசை, இடம்பம், தருப்பம், லோபம், மோகம், குரோதம் இவைகளை ஒழித்திருப்பவர்களே சிஷ்டர்கள் எனப்படுவார்கள். அந்தப் பிராமணர்கள் தர்மசாஸ்திரமாகிய இரதத்தில் ஏறிக்கொண்டு வேதமாகிய கத்தியைத் தரித்திருப்பார்கள். அவர்கள் விளையாட்டாகப் பேசுவது கூடத் தர்மமாகவே யிருக்கு மென்பர் கற்றுணர்ந்த பெரியோர்கள் என்று போதாயனர் கூறினர். வேதசாஸ்திரங்களைக் கற்றறிந்த நாலு பிராமணர்கள் கூடியிருந்தாலும், மூன்று சாஸ்திரங்களைக் கற்றவர் கூடியிருந்தாலும் அந்தக் கூட்டத்துக்குப் பரிஷத்து என்றுபேர். அந்தப் பரிஷத்தால் சொல்லப்படுவனவே தர்மமாகும். ஆத்மஞானியும் தருமசாஸ்திரம் அறிந்தவருமான ஒரே ஒருவர் சொல்வதும் சிறந்த தர்மமாகும் என்று யாக்ஞவல்கியர் சொன்னர். வேதங்களைக் கரை கண்டவர்ளான நாலுபேர் அல்லது மூன்றுபேர் சொல்வது எதுவோ அதைச் சிறந்த தருமமென்று அறியவேண்டியது. வேதசாஸ்திரம் அறியாதவர்கள் ஆயிரம்பேர்கள் சொன்னலும் அது தர்மம் ஆவதில்லை என்று பராசரர் சொன்னர். மிகுந்த வணக்கமும், விருத்தாப்பியமும் ஆத்மஞானமும் உள்ளவர்களும், இடம்பம் பொருமையில்லாதவர்களுமான

பரதகண்டத்தின் எல்லாத்தேசத்திலும் உள்ளவர்களால் அனுஷ்டிக்கப் படும் ஆசாரம் சிறப்புடையது. அதை மனப்பூர்வமாய் அனுஷ்டிப்பவன் இகபரங்களாகிய இரண்டுலோகங்களையும் தன் வசமாக்கிக்கொள்வான் என்று ஆபஸ்தம்பர் கூறினர்.

இவ்வாறு கூறியதன் கருத்தியாதோவெனின், சிற்சில ஆசாரங்கள் பூர்வயுகங்களில் அனுஷ்டிக்கப்பட்டன. யுகதர்ம வலிமை தாழ்மையை நோக்கி இந்த யுகத்தில் அனுஷ்டிக்கப்படவில்லை. பூர்வ யுகங்களில் அனுஷ்டிக்கப்படாவென விலக்கப் பட்டவைகளிற் சில இந்த யுகத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. அவை அகங்கார மமகார குரோத வசப் படாத சிஷ்டர்களால் யுகதரும வலிமையை நோக்கி ஒப்புக் கொள்ளப்பட் டன. ஒப்புக்கொண்டவர் வேதவேதாங்கங்களையும் தர்ம சாஸ்திரங்களையும் நன்குணர்ந்த மஹாத்மாக்களாதலால் அது தர்மமேயாம் என்று விளங் கிற்று. உதாரணமாக பூர்வ யுகத்தில் மாமன் மகளை அத்தை மகனும், அத்தைமகனை மாமன் மகளும் விவாகம் செய்து கொள்ளக்கூடாது. அவர் கள் தாய் தகப்பனுடன் பிறந்த சகோதர சகோதரிகளுக்குப் பிறந்தவர் களாதலால் அந்தப் பெண்ணும் பிள்ளையும், சிற்றப்பன் பெரியப்பன் மக் களைப்போல சகோதர முறையுடையவர்களே யாவர். ஆதலால் அவர்களு க்கு விவாகம் செய்விக்கக் கூடாதென்று கூறி விலக்கப்பட்டது. இந்த யுகத்தில் அது தடையின்றி அனுஷ்டிக்கப்படுகின்றது. விலக்கப்படுவ தில்லை. இது பூர்வ காலத்தில் சில தாழ்ந்த ஜாதியாரால் முறைமையெனக் கொண்டனுஷ்டிக்கப்பட்டுவந்தது. உயர் குலத்தாரால் அனுஷ்டிக்கப் படவில்லை. பிறகு பிராமணர் நீங்கிய உயர் குலத்தாராகிய மூவருணத் தாரும் அனுஷ்டித்து வந்தார்கள். தற்காலத்தில் பிராமணர்களும் அது முறையென்றே அனுஷ்டிக்கிறார்கள். சில வேதியர் இதை அனுஷ்டிப்ப தில்லை. இது நிஷித்தமானதாயிருந்தாலும் விருப்பும் வெறுப்புமில்லாத வேதபண்டிதராகிய சிஷ்டர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட படியால் விலக் காகாது என்பது. இன்னும் சில காலத்தில் அந்நிய தேச வாசிகளைப் போலச் சிற்றப்பன் பெரியப்பன்மக்களுக்கு விவாகம் செய்வதும் விதியாய் விடும் போலும்.

பூர்வ யுகங்களில் அண்ணன் தம்பிகளில் எவரேனும் சந்ததியின்றி யிறந்து போனால், இறந்தவனுடைய சகோதரன், இறந்தவன் மனைவியைக் கூடிப் புத்திர சந்தானம் உண்டாக்குவது விதியாயிருந்தது. இவ்விதி பாண்டவர் காலம் வரைக்கும் (துவாபரயுகம் முடிய) அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. கலியுகத்தில் இவ்விதி விலக்கப்பட்டது. பூர்வ யுகங்களில் சிராத்தகாலத்தில் மாம்சம் உபயோகிக்கப்பட்டது. இக்காலத்தில் விலக் கப்பட்டது. முற்காலத்தில் உபநயனம் செய்யப்படாத பிள்ளைகளைப் பந்தியில் வைத்துக்கொண்டு புஜிப்பதில்லை. இக்காலத்தில் புஜிக்கிறார்கள். முற்காலத்தில் சிறுவர்களுக்குப் பழைய அமுது படைப்பதில்லை. இக்

காலத்தில் குற்றமில்லையென்று ஒப்புக்கொள்ளப்பட்டது. முற்காலத்தில் மூத்த புத்திரனுக்கு ஜேஷ்டபாகமென்று ஒருகூறு அதிகம் பகிர்ந்து கொடுக்கப்பட்டு வந்தது. அது இக்காலத்தில் விலக்கப்பட்டது இப்படியாகப் பல விஷயங்கள் பூர்வ காலத்தில் விதியாக ஏற்பட்டிருந்தவை இக்காலத்தில் விலக்கப்பட்டன. இவையெல்லாம் காலபேதங்களை உத்தேசித்து விருப்பும் வெறுப்புமில்லாத சிஷ்டர்களால் கலியுகாரம்பத்திலேயே ஏற்படுத்தப்பட்டன. இக்காலத்தில் அகங்கார மமகார குரோதாதிதோஷங்கள் அற்றவர்களும், விருப்பு வெறுப்பில்லாதவர்களும், சாஸ்திரங்களையும் வேதங்களையும் கசடறக் கற்றுணர்ந்தவர்களும் அகப்படுவது அரிதினுமரிதே. கிடைத்தாலும் தாக்ஷண்யம், அச்சம், ஆசை இம்மூன்றுமில்லாதவர்களும் சுயநலங்கருதாதவர்களும் கிடைப்பதரிது. இக்காலத்து வைதிகர் பலர் காசாசையினலும் தாட்சண்யத்தினலும் விதி கடந்து நடப்பது பிரத்தியட்சம். ஆதலால் இக்காலத்தில் சிஷ்டர்களென்று நூல்களாற் புகழப்பட்ட பெரியோர்கள் இரார்களென்றே கூறவேண்டும். ஆதலால் பராசர ஸ்மிருதியாதி நூல்களிற் கூறப்பட்ட விதிவிலக்குகளையே நாம் அனுஷ்டிக்கவேண்டும். பராசராதிஸ்மிருதிகளால் கலியுகத்துக்கு ஏற்பட்ட விதி விலக்குகளே கூறப்பட்டனவாதலால் அதைப்பற்றி நாம் யோசிக்க வேண்டியதில்லை.

எல்லா வருணத்தாரும் தத்தம் வருணாசிரமங்களுக்கடுத்த தர்மத்தையே அனுஷ்டிக்கவேண்டும். அதனல் குறைவற்ற சுகம் கிடைக்கும். அன்றியும் மனிதன் மறுஜன்மத்திலும், தான் இந்த ஜன்மத்தில் அனுபவியாமல் விட்டிருக்கும் புண்ணியபலனை அனுபவிப்பான். மறுஜன்மத்தில் செல்வம் கல்வி புகழ் இவற்றுல் சிறக்த உயர் குலத்திலே பிறந்து சற்கருமானுஷ்டானங்களையே செய்வான். அழகு அறிவு வலிமை முதலியவற்றையும் பெறுவான். சக்கரம்போலச் சுழன்று வரும் இகபரமென்கிற இரண்டு லோகங்களிலும் அவன் சுகத்தைப் பெறுவானே யன்றித் துன்பத்தை அடையவே மாட்டான் என்று ஆபஸ்தம்ப முனிவர் கூறினர்.

தர்மத்தினல் இவ்வுலகம் நிலைநிற்கின்றது. அந்தத் தருமத்தைத் தவிர அனுஷ்டிக்கத் தக்கது மற்றென்றுமில்லை ஆதலால் தருமத்தையே விரும்பிச்செய்யவேண்டும் என்று தைத்தரீய வேதம் கூறுகிறது. இதன் தாற்பரியம் யாதென்றல், நித்திய நைமித்திக சிரௌதஸ்மார்த்த கருமங்களே தருமம் என்று சொல்லப்படுவனவாம். இந்தத் தருமத்தினலே பலவித வேற்றுமையாயுள்ள உலகங்கள் நிலைபெறுகின்றன. ஆதலால் இந்தப் பயனையடைய விரும்புவோரும் இந்தத் தருமத்தையே அனுஷ்டிக்கவேண்டுமென்பது. அவ்வேதத்தில உள்ள மற்றொரு வசனம் முன் விவரித்துக் கூறிய தருமமே சகல ஜகங்களையும் நிலைநிறுத்துகின்றது. உலகத்திலும் தர்மானுஷ்டானம் செய்பவனையே எல்லாரும் புகழ்ந்து அவனை யடைகிறார்கள். விதித்த கருமத்தைச் செய்வதனலே ஒருவன் தான் செய்த பாவங்களை

யெல்லாந் தொலேக்கிருன். சர்வமும் தருமத்தையே அடுத்திருக்கின்றது. அஃதில்லாவிட்டால் எல்லாம் ஒழிந்துபோகும். ஆகையாலேதான் தர்ம சாஸ்திரம் உணர்ந்தவர்கள் தருமமேஉயர்ந்ததென்று சொல்கிருர்களென்று வெளிப்பட்டது. ஜாதி ஒன்றை மாத்திரம் அடுத்து ஏற்பட்ட தருமம் வருண தருமமென்னப்படும். உதாரணம் உபநயனம். அதுவே ஆசிர மத்தை அடுத்திருந்தால் ஆசிரமதருமம் என்னப்படும். உதாரணம்: பிக்ஷை தண்டம் முதலியவை; இவை வர்ணத்தையும் ஆசிரமத்தையும் அடுத்திருந் தால் வர்ணுசிரம தருமம் என்னப்படும். உதாரணம்: முஞ்சி அரைநாண் முதலியனவும் அவைபோன்றனவே என்று ஸ்மிருதி சந்திரிகை கூறுகின் றது.

கறையான் புற்றை விருத்தியாக்குவதுபோல எந்தப் பிராணியையும் வருத்தாமல் கொஞ்சம் கொஞ்சமாகத் தருமத்தை ஒருவன் சேர்க்கவேண் டும். அது பரலோகத்துக்கு உதவியாகும். தன் பிதாவாவது புத்திரனுவது மனேவியாவது பரலோகத்தில் வந்து உதவி செய்வதில்லே. பந்துக்களும் அணுகார். தான் செய்த தருமமே உதவிசெய்யும். ஒருவனே பிறந்து இறப் பதுபோல ஒருவனே சுகதுக்கங்களே அனுபவிப்பான். மரித்தவன் சரீரத் தைக் கட்டையைப் போலவும், மண்கட்டிகல் முதலிய போலவும் மனிதர் பூமியில் விட்டுத் திரும்பிக்கூடப் பாராமல் போய் விடுவார்கள். அவன் செய்த புண்ணிய பாபங்கள் மட்டும் அவனேப் பின் தொடர்ந்து செல்லும். ஆகையால் தனது சொந்த நன்மைக்காகக் கொஞ்சம் கொஞ்சமாகத் தரு மத்தைத் தினந்தோறும் செய்யவேண்டும். தரும சகாயமிருந்தால் கடக்கக் கூடாத அந்தகாரத்தை யெளிதில் கடந்து செல்லலாம். தர்மானுஷ் டானம் செய்பவனும், தபசினுல் பாபமற்றவனுமான புருஷனே மேலான பரலோகம் தானே அடைகிறதென்று மனு எடுத்துக் கூறினர்.

இதனுல் அகங்காரம், பொருமை, பொய்ம்மை இல்லாதவர்களும், எல் லாப் பிராணிகளிடத்திலும் இரக்கமும் தயவும் உடையவர்களும், கலங்காத சித்தமுடையவர்களும், சகல சாஸ்திரங்களேயும் கசடறக் கற்றுணர்ந்தவர் களும் அவற்றின் பொருளேத் தெளிவாயெடுத்துக்கூறி உலகத்துக்கு உப காரம் செய்கிறவர்களும், ஆஸ்திக புத்தியும் தெய்வசிந்தையும் உள்ளவர் களும், தர்மானுஷ்டான சீல முடையவர்களும், சாஸ்திரங்களில் உண்டா கும் சந்தேகங்களே நிவிர்த்தி செய்யக்கூடியவர்களும் பட்சபாதக மற்றவர் களும், ஜபதபங்களேச் சரியாய்ச் செய்து வருகிறவர்களும், எப்போதும் ஹிதத்தையே சிந்திப்பவர்களுமாயுள்ளவர்களே சிஷ்டர்கள் என்னப்படு வார்களென்பது எல்லா ஸ்மிருதிகளுக்கும் ஒப்ப முடிந்த கருத்தாம் என்க.

(தொடரும்) சிவானந்த சாகர யோகீஸ்வரர்.

---

சந்தாதாரர்களுக்கு.—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிருேம்.

# சாயாபுருஷ தெரிசனம்.

இது நன்மை தீமை அறியக்கூடியது. ஆனந்தபோதினியின் அபி விருத்தியை நோக்கும் சகோதர, சகோதரிகாள்! அடியேன், சங்கரனார் திருவுளமகிழ்ந்து உமாமகேஸ்வரிக்கு இதுகுறித்து அருளிச்செய்த சரநூல் என்னும் சாஸ்திரத்தினின்றும், ஓர் செய்யுளையும், அதன் உரையையும், இதனடியில் வரைகின்றேன். நண்பர்கள் பலரும், அவற்றின் பலன்களை உணர்ந்து சௌக்கியமுறுவார்களாக.

வருங்கால சம்பவத்தை உணர, இறைவன் அருளிய சாஸ்திரங்களுள், சரநூலும் ஒன்று. இச்சரநூலின்படி, எக்குலத்தவராயினும், நடைதப்பாமல் பார்ப்பவர் எவரோ அவரே தேவரென யாவராலும் பூஜிக்கப்பட்டு வாழ்ந்து, சாயுச்சிய மடைவர்.

“ பாரிலொத்த நிலத்தகல்வான் களங்க மற்றாற்
பத்தடிக்குள் ஐந்தடியாம் பருவந் தன்னிற்
சீரியமெய் நிழல்கழுத்து கைகால் சென்னி
சிமிட்டிப்பார்த் திமையாமற் றிகழ்வான் பார்க்கிற்
கூருருவாம் பொன்கண்டாற் செல்வம் வெள்ளை
குறைவிலுயிர் செம்மையுயி ரிளைக்குங் குற்றம்
காருருநோ யாறுபிறை கைகால் குன்றிற்
கங்குறையின் மூப்பிறையிற் காட்டுஞ்சாவே.”

கருத்துரை:—பூமியிலே மேடுபள்ளமில்லாத இடத்திலிருந்து, ஆகாயத்தில் மேக மறைவில்லாமல் சூரியன் பிரகாசிக்கும்பொழுது, தன் நிழல் ஐந்து அடி நீள முதல் பத்தடிக்குட்பட்ட வேளையில், தான் அந்நிழல் முகமாய் நின்று, கைகள் இரண்டையும் தொங்கவிட்டு,கண்கள் இமையாமல் அந்நிழலிற்றோன்றும் தனது கழுத்து, கைகள், கால்கள் ஆகிய இவ்வுறுப்புக்களில் ஒன்றைப்பார்த்து அப்படியே இமையாமல் ஆகாயத்தைப் பார்த்தால், அங்கே அவன் உருவம் தோன்றும்; அவ்வுருவம் பொன் நிறமாய் இருந்தால் அவனுக்குச் செல்வம் வரும்; வெண்மையாயிருந்தால் பிராணபயமில்லை; ஆயுள் வளரும். செம்மையாகில் ஆயுள் தேயும்; அதற்கு ஒருகுறையும் வரும். கருமையேல் நலி. அவ்வுருவில், கைகளாவது கால்களாவது தோன்றாமல் இருந்தால் ஆறுமாதத்திற்குள் மரணம். தலையே காணாமல் கவந்தமாய்க் காணில் மூன்று மாதத்தில் மரணம்.

சந்திரன் பிரகாசிக்கும்பொழுதும் இப்படியே பார்ப்பது முண்டு. இதனையும் சாயாபுருஷ தெரிசனம் என்று அறிஞர் சொல்லுவார்கள். இச்சாயாபுருஷ தெரிசனத்தை, விடாமல், பன்னிரண்டு வருஷம் பார்த்துக் கொண்டுவந்தால், தன் முன் நிற்கும் அந்நிழல் தன்னுடன் பேசும். அதன் மூலமாய் அஷ்டமாசித்தியையும் அடையலாம். தவிரவும், பின்னும் சில நாட்களில் அந்நிழல் ஓர் ஆள் உருவமாகித் தன்னுடனே திரியும்; படுத்

தால் தானும் படுக்கும்; எழுந்தால் தானும் எழுந்திருக்கும்; பார்ப்பவனுக்கு ஏற்படும் நன்மை தீமைகளை முன்னதாக உணர்த்தும்; இன்னும் இப்படிப்பட்ட அநேக அற்புதங்களை விளக்கும். இதை அறிந்து கடவுளுடைய பாதங்களை நினைத்துப் போற்றி செய்தால், வினையென்பதிராது.

ஆர். ராமச்சந்திரன், சிந்தாதிரிப்பேட்டை.

---

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(276-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "நன்றி மறவேல்"

"(மனிதனே!) நன்றி—(ஒருவர் உனக்குச்செய்த) உபகாரத்தை, மறவேல்—(நீ எப்பொழுதும்) மறவாதே" என்பது இதன்பொருளாம்.

ஒருவரால் ஒருகாலத்தில் உதவிபெற்றவர் இன்புற்று மகிழ்கின்றனராகலின் அவ்வுதவியை எக்காலத்திலும், எந்நிலையிலும், எக்காரணத்தாலும் மறத்தல் கூடாது; அங்ஙனம் மறவாதிருப்பவரே மக்களுள் மிக்கோராவர்; இம்மை மறுமை இரண்டிடங்களினும் நலம் பெறுவர்; மறப்பவர் சிறப்படையார்; உலகத்தில் பலராலும் பழிக்கப்படுவர்; மறுமையிலும் எரிவாய் நரகுட்புகுந் தழல்வார். உயர்நெறிகாட்டும் பொதுமறையயந்த திருவள்ளுவனாரும்,

> "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
> வானகமு மாற்ற லரிது"

என்றும்,

> "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்றும் கூறியவற்றால் செய்ந்நன்றியறிதலின் உயர்வு நன்குணரப்படும். கீழ்வரும் சிறுகதையாலும் அதனை அறிந்துகொள்ளலாம்:—

ஒருநகரத்தில் மிக்க செல்வமுடைய பிரபு ஒருவர் சிறப்புடன் வாழ்ந்து கொண்டிருந்தார். இவர், எவருக்கும் உபகாரஞ்செய்யுங் குணமுடையவர். பிராணிகளிடத்திலும் தயையுள்ளவர். இவரிடத்தில் நாயொன்று சிறுகுட்டிப்பருவத்திலிருந்து வளர்ந்துவந்தது. அதைப்போலவே ஒருபணியாளனும் இளமைதொட்டுப் பணிபுரிந்துவந்தான். பிரபு, அந்தநாயினிடத்திலும் வேலைக்காரனிடத்திலும் மிக்க அன்புசெலுத்திவந்தார். தம்முடைய உணவிலும் அந்த நாய்க்கும் அடிமையாளுக்கும் பங்கிட்டுக் கொடுப்பது அவருடைய வழக்கம். இங்ஙனம் அவர், அந்த நாயையும், வேலைக்காரனையும் மிகுந்த பற்றுதலோடு வளர்த்துவருங்காலத்தில் ஒருநாள் அவருக்கு அடுத்த ஊருக்குக் கால்நடையாகச் செல்லவேண்டிய முக்கிய அலுவலொன்று நேர்ந்தது. அதனால் அவர், அவ்வூருக்குப் பிரயாணமாகிச் சென்றார். எங்குச்சென்றாலும் அந்த நாயையும், பணியாளையும் உடனழைத்துச்

செல்வது வழக்கமாதலின் அவ்வழக்கப்படியே அன்றைக்கும் அழைத்துக் கொண்டுபோனார். அவர் அவ்வாறு சென்றவழியில் அடர்ந்த வோர் காடிருந்தது. அக்காட்டினடுவில் அவரும் நாயும் வேலைக்காரனும் போகும் போது பாதையோரத்திலுள்ள செடிமறைவில் பதுங்கிக்கிடந்த சிறுத்தைப் புலியொன்று திடீரென்று அப்பிரபுவின்மேற் பாய்ந்தது. அதைக் கண்டதும் அவருடன் சென்ற வேலைக்காரன் நன்றி மறந்தவனாய், 'இவர் புலியினாலிறப்பது திண்ணம். இனி இவரால் நமக்காவதொன்றுமில்லை' என்று தன் உயிரைக் காப்பாற்றுதற்கு ஒரேபாய்ச்சலாகப் பாய்ந்தோடி விட்டான். நாயோ பகுத்தறிவற்ற பிராணியாயிருந்தும் தன் எஜமானருக்கு அபாயம் வந்துவிட்டதென்பதை யுணர்ந்து அவரைக் காப்பாற்றவேண்டுமென்னும் துணிவுபூண்டு உடனே வீராவேசங்கொண்டு அந்தப் புலி அப்பிரபுவை அடிப்பதற்கு முன்னரே அதன்மேற் பாய்ந்து அதனுடைய தொண்டையைக் கவ்விக்கொண்டது. நாய் மிக்க உயரமும், பருமனும், பலமுமுள்ளதா யிருந்தபடியாலும், சிறுத்தை ஒரு ஆள் தைரியத்துடனெதிர்த்தால் அவனால் அடக்கிவிடக்கூடியதாதலாலும், அந்த நாயின் வாயினின்றுந் தப்பக் கூடியவரை முயன்றும் அதனால் அஃதியலவில்லை. சிறிது நேரத்திற்குள் நாய் அதன் தொண்டையைக் கடித்துக்கடித்து உதறி அதனைக் கொன்றுவிட்டு அப்பிரபுவிற்குமுன் வாலையாட்டி மனக்களிப்பு விளங்கக் குரைத்துத் தன் நன்றியறிதலைக் காட்டிக்கொண்டு நின்றது.

அதைக்கண்டு அப்பிரபு, "நம்மிடம் நெடுநாட்களாக உணவுண்டு வளர்ந்த அச்சண்டாளன் நன்றி கொன்றவனாய் இப்போது நம்மை ஆபத்தில் சிக்கவிட்டுத் தன்னுயிரைக் காப்பாற்றும்பொருட்டு ஓடிவிட்டான்; நாயோ உயிர்க்கஞ்சாமல் புலியோடெதிர்த்து அதனைக் கொன்று நம்மைக் காப்பாற்றிவிட்டது; அவன் மனித வகுப்பைச் சார்ந்தவனாயிருந்தும் இந்த நாய்க்குள்ள நன்றியறிதல் குணம் அவன்பால் இல்லாமற் போயிற்று; அவன் நாயினும் கடையனாவான்" என்று நாயை மிகவுங் கொண்டாடி முதுகைத்தடவிப் பிரியத்துடன் அழைத்துக்கொண்டு வழிக்கூடி நடந்து போனார்.

புலியோ ஓர் ஆள்பலமுடையது. அந்தப் பிரபுவோடும் நாயோடும் அவ்வேலைக்காரனுமிருந்தால் அச்சிறுத்தையை எளிதிற் கொன்றுவிடலாம். அக்காரியம் அவ்வளவு சுலபமாயிருந்தும், அப்பணியாளன் தன்னலத்தையே விரும்பியவனும், நன்றியறியாதவனுமாதலின் தன் எஜமானருக்குத் துணைசெய்யாமல் ஓடிவிட்டான். இப்பேர்ப்பட்டவனுக்குத் தெய்வந் துணைச் செய்யுமா? அவன் நீண்டகாலந்தான் உலகிலிருப்பானா? அந்தோ! அவனுடைய தன்னல எண்ணம் இன்னலாய் முடிந்துவிட்டது. அவன் அவ்வாறு தன்னைக் காப்பாற்றியவரை மறந்து புலிக்குப்பயந்து மிக விரைந்தோடும்போது புற்கள் நிறைந்த ஒருபள்ளத்தில் பாய்ந்தான். அதற்குள் பெரிய வேங்கையொன்று படுத்திருந்தது. அவன் பாய்ந்த வேகத்தால்

மறைந்துகிடந்த அவ்வேங்கையின் முதுகில் வீழ்ந்துவிட்டான். வேங்கை, யாதோ தன்மேல் வீழ்ந்ததென்று பயந்து துள்ளியெழுந்து அவனைப் பார்த்து மனிதனென்றுணர்ந்து பெருஞ்சினங்கொண்டு ஒரே அறையில் அறைந்து கொன்றுபோட்டுப் போய்விட்டது. அவன் புலிக்குப் பயந்தோடியும் வேங்கையிடத்திற் சிக்கி யிறந்தான். அப்பிரபு நல்லெண்ணமுடையவராகலின், புலிப்பாய்ச்சலிற் சிக்கியும் நாயினுற் காப்பாற்றப்பட்டார்.

அவன் அவ்வாறு இறந்துகிடக்கும்போது மேற்கூறியபடி சென்ற பிரபு அவனைக்கண்டு, 'இவன் நன்றிமறந்ததால் சிறியபுலிக்குப் பயந்தோடி வந்தும், பெரிய புலியினுல் அடித்துக்கொல்லப்பட்டான்' என்று வியப்புற்றுத் தாம் குறித்த ஊருக்குப்போகாமல் உடனே திரும்பிச் சொந்த ஊருக்குப்போய் அங்குள்ளாரிடம் நாயின் நன்றியறிதலையும், வேலைக்காரனின் விசுவாசமற்ற தன்மையையும், அவன் இறந்ததையும் சொல்லி, அவனுடைய சவத்தைச் சிலரால் எடுத்துவரச்செய்து அடக்கம் செய்வித்தார். அவ்வூரா ரனைவரும் அந்நாயைப் புகழ்ந்து அவ்வேலைக்காரனை இகழ்ந்தார்கள். அவன் நன்றி மறந்ததால் அவ்வாறு இறந்து நரகத்தை அடைந்தான். அந்நாய் அப்பிரபுவால் அருமையினும் அருமையுள்ளதாகப் பாதுகாக்கப்பட்டு முடிவில் இவ்வுலகைத் துறந்து தன் உயரியகுணத்தால் சிறந்த கதியுட் சேர்ந்தது.

(தொடரும்) சேம்பூர்-வீ. ஆறுமுகஞ்சேர்வை.

---

## சிவராத்திரி விரத மகிமை

சிவநேயச் செல்வர்காள்!

இம்மாதத்தில் மஹா சிவராத்திரி வருகிறபடியால் இம்மாதம் மற்றைய மாதங்களைவிட மேலானதென்றே சொல்லலாம். இதனுல் கடவுளாகிய சிவன் ஒருவர் உண்டென்று நாம் வருடத்தில் ஒரு நாளாகிலும் எண்ண வழியுண்டாம். சிவராத்திரியாகிய மஹா தினத்தில் சிவபூஜைசெய்து, உபவாசமிருந்து, இரவு கண் விழித்து, சிவனைத்தியானித்தால், நம் பாவங்கள் நசியும் சிவ, சங்கர, சம்போ என்று பகவானுடைய நாமங்களை உச்சரித்த மாத்திரத்திலேயே நமக்கு பக்திபிறந்து, நாம நன்மார்க்கத்தில் திரும்பி, புண்ணியஞ் செய்தவர்களாவோமென்று சாஸ்திரங்களாலும், கற்றறிந்த மேதாவிகளினுலுஞ் சொல்லப்படிருப்பதால், இந்த விரதத்தை யனுஷ்டித்தவர்களது நன்மையை அளவிட்டுச் சொல்லவுங்கூடுமோ! ஞானவான்களும், பகதிமான்களும், ஏனையோரும் இந்த மகிமையைச் செவ்வனே சாஸ்திரயுக்தமாய்த் தெரிந்திருந்தபோதிலும், என்போன்ற பாமரர்களுக்கும், கடவுளைத் தியானிக்கும் அப்பியாசத்தைச் செய்து வருவோருக்கும் இச்சிவராத்திரி விரதம் என்ன மகிமையை யுண்டுபண்ணுகிறதென்பதைப் புல்லறிவாளனுகிய அடியேன் வாசித்தபடியும், கேட்டபடியும், மிகவும்

சுருக்கமாக, தமிழ்மக்க ளனைவரும் அறிந்துகொள்ளும்பொருட்டு, நமது "ஆனந்தபோதினி" வாயிலாக வரையத் துணிந்தனன்.

ஒருகாலத்தில் நைமிசாரண்ணிய வாசிகளாகிய மகரிஷிகள், ஸ்ரீ ஸூத முனிவரைநோக்கி "சுவாமீ! உலகத்தில் எந்த விரதத்தை ஆசிரயித்தால் சிவபெருமான் உவந்து சகல சுகங்களையும், புத்தி முத்திகளையும் கொடுப்பாரோ அந்த விரதத்தை எங்கட்குச் சாற்றுவீர்" என வினவ, அதற்கவர் உளம்பூரித்து, பூர்வத்தில் இதுவிஷயமாய், சிவபெருமான் தேவர்களின் வேண்டுகோளுக் கிணங்கிச் சொல்லியருளிய சாராம்சத்தை இயம்பலுற்றார்.

விரதங்களுக்கெல்லாம் சிவராத்திரி விரதமே முதல்தரமானதும், உத்தமமானதுமாம். அன்றியும் இது வேதங்கள், உபவேதங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், தர்மசாஸ்திரங்கள் ஆகிய இவற்றினுள் சொல்லியிருக்கும் இரகசியங்களிலும், அதிரகசியமான சாராம்சம். உலகத்தில் மோக்ஷங் கொடுக்கத்தக்கவை நான்கு. அவை:—

1. சிவார்ச்சனை
2. உருத்திரபாராயணம் அஷ்டமி சோமவாரம்.
3. கிருஷ்ணபக்ஷம், சதுர்த்தசி (பிரதோஷம்)

ஆகிய இம்மூன்று நா ளுபவாசமும்,

4. காசி க்ஷேத்திரத்தில் மரணமும் ஆம்.

ஆனால் இந்நான்கினும் சிவராத்திரி விரதமே அதியுக்தமானது. புத்தி முத்திகளை யடைய விரும்புவோர் இவ்விரதம் ஒன்றையே யனுஷ்டிக்க வேண்டும். இவ்விரதத்தை எந்த விதியால் எப்படி பூஜிக்கவேண்டும் என்பதை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

இவ்விரதம் எல்லோருக்கும் தர்மசாதனமானது; எவ்வருணத்தாருக்கும், சிறியோர், பெரியோர், கற்றோர், கல்லாதார், தேவர், தானவர் முதலியோருக்கும் தகுதியானது. இது மாசிமாத கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி அர்த்தராத்திரி பதினான்குநாழிகையில் வருவது; கோடி பிரம்ம ஹத்திகளையும் நசிப்பிக்கும். ஆதலின் அப்புண்ணியதினத்திற் செய்யப்படும் காரியமாவது:—

அன்று கதிரவன் உதிக்குமுன் எழுந்திருந்து சந்தோஷ மனதுடன், நதி முதலிய புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து, நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, சிவாலயஞ்சென்று, சிவபூஜைபுரிந்து, நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்து மனம் அனலில் இட்ட மெழுகுபோல் உருக, அன்பினால் மூர்ச்சித்து, சுவாமியை நோக்கி, "சிவபெருமானே! நின் திருக்கருணையால் இச்சிவராத்திரி விரதத்தை யனுஷ்டிக்க வேண்டுமென் றிச்சையுற்றேன். அது நிர்விக்கினமாக முடியுமாறும், விரதமுடியுமளவும், உலகப்பற்று என்னைத் துன்புறுத்தாமலிருக்குமாறும், ஐம்புலன் வழி மனதைச் செலுத்தல், பகல் நித்திரை முதலிய அபத்தியங்கள் விலகி

பிருக்குமாறும் அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு, பூஜா திரவியங்களைச் சேர்த்துக்கொண்டு, சிவலிங்கத்திற்கு பூஜைசெய்து, சிவமந்திரஞ் ஜெபித்து, பக்தியோடு கண்விழித்து ஜாமங்களைக் கழிக்க வேண்டும்.

இனி சிவலிங்க அபிஷேக, நைவேத்திய, காலமுறையை நான்கு ஜாமங்களிலும் எப்படிச் செய்யவேண்டுமென்பதைப்பற்றிச் சிறிது கூறுவாம்

முதன் முதலில் இலிங்கத்தைவைத்துச் சுத்தமான ஜலத்தாலும், பிறகு எண்ணெய், பால், தயிர், நெய், தேன், பழங்கள், சந்தனம், வாசனுதிகள் கலந்த தீர்த்தம் இவற்ருலும், கடைசியில் பஞ்சாமிர்தத்தாலும், அபிஷேகஞ்செய்து, பின்னர் உலர்ந்த வஸ்திரத்தினுல் சிவலிங்கமூர்த்தியை உபசாரமாக ஒத்தி, சுகந்த பரிமள சந்தனஞ் சாத்தவேண்டும். முதலாம் ஜாமத்தில் சதபத்திரம், கமலம், காவீரம் முதலிய புஷ்பங்களும், இரண்டாம் ஜாமத்தில் கமலமும், வில்வமும், மூன்ரும் ஜாமத்தில் அறுகும், ஆத்தியும், நான்காம் ஜாமத்தில் நறுமணங்கமழும் மலர்களுங்கொண்டு சிவநாமங்களாலாவது, குரு உபதேசித்த மந்திரங்களினுலாவது அருச்சிக்கவும்; நிவேதனம், முதல்யாமத்தில் சுத்தான்னமும் கறிவகைகளும், பலகாரமும், இரண்டாம்யாமத்தில், பரமான்னமும், லட்டுமுதலிய பலகாரமும், மூன்ரும்யாமத்தில் மாவாற்செய்த நெய்சேர்த்த பலகாரவகைகளும், பாயசமும், நான்காம் யாமத்தில், கோதுமை, சர்க்கரை, நெய் சேர்த்துச்செய்த மதுரமான பலகாரங்களும் நானுவித பழவகைகளும் நிவேதிக்கவும்; பழங்களில் முதலாவது வில்வப்பழமும், இரண்டாவது பலாப்பழமும் மூன்ருவது மாதுளங்கனியும், நான்காவது பலவித பழச்சுளையும் சமர்ப்பிக்கவும்; தாம்பூலதக்ஷிணைகளோடு ஜாமங்கள் நான்கிலும் பிராமணபோஜனம் முதலியவை யளிக்கவேண்டும்.

மற்றையநேரங்களில், சிவமகிமையைப் பிறர்க்குச் சொல்லவேண்டும். அல்லது பிறர் சொல்ல சிரவணஞ்செய்யவேண்டும். இவ்வாறு நான்கு ஜாமங்களிலும் நான்கு பார்த்வலிங்கங்களை ஆவாஹநாதி விசர்ஜனுனந்தமான பூஜைசெய்து, நித்திரையின்றி, சிவபணிவிடைகளுடன் விழித்திருந்து இரவைக்கழித்து, விடியுமுன் மீண்டும் ஸ்நானஞ்செய்து நித்திய விதியை முடித்துச் சிவனை ஸ்தோத்திரித்துச சிவபெருமானிடத்தில், "சுவாமி! தேவரீரது கிருபையால் யான் விரும்பிய சிவராத்திரிவிரதத்தை முடித்தேன். என் சக்திக்கேற்ப யான்செய்த தவத்திற்குத் தேவரீர் சந்தோஷித்து நற்பயன்களைக் கொடுக்கவேண்டும். அடியேன்மீது கருணைபுரிந்து தயைவைக்கவேண்டும்" என்று புஷ்பாஞ்சலி சமர்ப்பித்து நமஸ்கரித்து, பார்வதிதேவியாரையும் நமஸ்கரித்து: தான்செய்த பூஜாபலனைச் சிவப்பிரீதி செய்து, ஜலபானம்பண்ணி அவ்விரதநியமத்தை விடவேண்டியது.

இப்படி விரதஞ்செய்தவர்களுடைய சமீபத்திற் சிவ்பெருமான் எழுந்தருளியிருப்பார். இதன் பலத்தைப் பல்லாயிரவருடம் சொன்னுலும் முடி

யாது. இவ்விரதத்தைப் பக்தியின்றிச் செய்தவர்களுக்கும் முக்திபுண்டாகும். இப்படியே, பிரதி சிவராத்திரியிலுஞ் செய்யவேண்டும்.

அடியார்களுள்ளத்தில் சதா வாசஞ்செய்யும் சிவன் நம்மை நல்வழிப் படுத்துவாராக.

“ மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்ப தென்நாண்
மந்த்ர குருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌன குருவே”

பூ. அமிர்தலிங்கம்.

குறிப்பு:—மாசிமாதம், கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி இரவு பதினொன்கு நாழிகை லிங்கோற்பவகாலம் இதுவே மகாசிவராத்திரி புண்ணியகாலம்; கிருஷ்ணபக்ஷம் திரயோதசி 30-நாழிகைக்குச் சதுர்த்தசி வியாபிப்பது உத்தமம்; திரயோதசி இரவு பதினொன்றேகால் நாழிகைக்குச் சதுர்த்தசி வியாபிப்பது மத்திமம்; திரயோதசியில்லாமல் சதுர்த்தசி வியாபிப்பது அதமம். ஒருகாலம் அன்றையிராத்திரிக்கு அமாவாசை பிரவேசிப்பது பரியாயசிவராத்திரி. இந்த மகாசிவராத்திரி தினத்தில் நேரிடும் திரயோதசி சிவபெருமானுக்குத் தேகமாகவும், சதுர்த்தசி தேகியாகவும் அல்லது சத்தியாகவும் சிவமாகவும் கூறப்படும். இதையனுஷ்டிப்பதால் வரும் பலன் இம்மையில் சத்சனதானாதி சௌபாக்கிய சம்பத்தும், மறுமையில் சுவர்க்காதி போகமுமாம். இது காமியம். நிஷ்காமிகள் இகத்தில் புத்தியும், பரத்தில் முத்தியும் பெறுவர். பிரமகற்பமொன்றில் சத்தி நாற்சாமத்திலும் சிவபூசைசெய்து தாம் பூசித்தகாலம் சிவராத்திரியாகவெனச் சிவமூர்த்தியை வரம்வேண்டிப்பெற்ற நாள் எனவும், சத்திவிளையாட்டாகச் சிவமூர்த்தியின் திரிநேத்திரங்களைமூட உலகங்கள் இருண்டன. அப்போது தேவர்கள் சிவபிரானை வணங்க அக்காலமே சிவராத்திரியாயிற்றென்றும், திருப்பாற்கடலிற் றோன்றிய விஷத்தையுண்ட சிவமூர்த்தியை அந்த விஷம் பீடிக்காமலிருக்கத் தேவர்கள் இராமுழுதும் பூசித்தனர். அதுவே சிவராத்திரியெனவும், மற்றும் பலவாறாகவும் புராணங்கள் கூறும். சதாகாலமும் தியானித்தற்குரிய சிவபெருமானை மாந்தரிற் பலர் சரிவரத் தியானியாதிருத்தலின், வருடத்தில் ஒரு நாளாவது சிரத்தையோடிருந்து அப்பெருமானை வழிபடும்பொருட்டு இம்முக்கியதினம் ஏற்பட்டிருக்கின்றது. ப-ர்.

---

## ஒற்றுமை.

ஒற்றுமையாவது ஒன்றாகுந் தன்மையாகும். இத்தன்மை எல்லா வுயிர்களுக்கும் இன்றியமையாத தொன்றாயினும் மனவுணர்வின் மிக்க மக்களுயிர்க்கே சிறப்பாவ தொன்றாகும்.

அறிவோடு கூடிய ஆண் பெண் எனு மிருபாலாரும் மக்கள் எனப்படுவர். மக்களே யெனினும் மனமென்பதோர் அறிவுடைய ராகாவழி, அம்மக்

கள் மாக்களெனப் படுவாராவர். மனவுணர்ச்சி யில்லாதார் இத்தன்மைய ராதல்,

“ மாவும் மாக்களு மையறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே ”

(தொல். பொரு-மர. 32) என்றதனானும் அதன் உரையானும் தெளிவாம். அறிவொடு புணர்ந்த ஆண் பெண் என்னு மிருபாலாரும் மக்களெனப் படுவாராதல்,

“ மக்க டாமே யாறறி வுயிரே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே ”

(தொல். பொருள்-மர. 33) என்றதாற் றெளியப்படும். இச்சூத்திரத்தி னுரையில் நச்சினார்க்கினியர் “ ‘தாமே’ எனப் பிரித்துக் கூறினமையான் நல்லறிவுடையார் என்றதற்குச் சிறந்தார் என்பதுங் கொள்க ” எனக் கூறி யிருத்தலானே அறிவுசேர்ந்த மக்களே பல்லாற்றானுஞ் சிறந்தாராக ஒற்றுமையுடையராதற் றன்மையராவர். அறிவுடையார் தாம் ஆன்றோர் அருளிய நூற்களையும் அன்னார் வாய்ச் சொற்களையும் முறையே கற்றுங் கேட்டும் தம் நுண்ணறிவாற் கொள்வனவும் தவிர்வனவும இன்னவென் றுணர்ந்து, (சான்றாண்மைதாங்குந் தூண்களாம்) அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையாதி குணங்களாற் சிறந்து, வாழ்க்கைக்குத் தன் னேரிலாச் சிறப்பினதாகிய ஒற்றுமையினைக் குறிக்கொள்வாராவர்.

ஒற்றுமைக்குக் காரணமாவன பலவெனினும் முற்கூறிய அன்பாதி குணங்களே சிறந்தனவாம். ‘அன்பாவது, ஒருவன் வாழ்க்கைத்துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனாதல்’ எனப் பரிமேலழகியார் விளக்கினர். நச்சினார்க்கினியரும் “ ஒப்பு முருவும்......... வென்ப ” (தொல். பொரு. பொருளியல்-53) எனுஞ் சூத்திரத்திற் கிட்ட வுரையில் ‘ அன்பாவது மனைவியர் கண்ணும் தாய் தந்தை புதல்வர் முத லிய சுற்றத்தின் கண்ணும் மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும் நேயம் ’ என்றனர். இக்கூற்றுக்களான் ஒரு குடும்பத்தினர் பலரும் தமக் குள் வேற்றுமை யின்றாகத் தம்முட் பொருந்தி வாழ்தற்பயனைத் தரு தற்பாலது அன்பேயாதலின் அன்பு ஒற்றுமை எழுச்சிக்குக் காரணமாவ தாம். அன்பென்னுந் தளையான் யாக்கப்பட்டு ஒழுக்கநெறியிற் செல்லும் குடியே உயர்குடியெனப் படுதலின், அக்குடிக்கு

“ இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு ”

(குற. குடி. 1) என்றதனான் நாண் இன்றியமையாத தொன்றாம். நாணாவது ‘ சால்பு, பண்பு முதலிய குணங்களா னுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங் களில் நாணுதலுடையராந் தன்மை ’ எனப் பரிமேலழகியார் கூறியதாம். தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடையாரே அடுக்கிய கோடிபெறி னும் தம்மொழுக்கங் குன்றுந் தொழில்களைச் செய்யாராதலின்

"குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு"

(குற. குடி. 5) என்றதற் கிலக்கியமாய் உலகந்தானே சுற்றமாச் சூழ்தலின் ஒற்றுமையுண்டாக வாழ்வாராவர். ஆதலின் நாணும் ஒற்றுமையினை விளைவிப்பதாம்.

ஒருவர் நாணேற்று அன்பாற் சுற்றந்தழுவ வேண்டின் உலகநடையினை யறிந்து செய்தலாகிய ஒப்புரவினை யுடைய ராகாராயின் தம்முயற்சியான் அறத்தின்வழி ஈட்டிய வொண்பொருளைத் தம்மவர்க்கும் தக்கார்க்கும் பயன்படுத்த வில ராவர். இலராகவே

"சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்"

(குற. சுற்ற. 4) என்பதற் கேற்பத் தம் தாளாண்மையின் பயனாய்வந்த செல்வம்தரும் பயனாகிய சுற்றத்தார் சூழவிருத்தலை யிழந்தவராவர். ஆதலின், ஒப்புரவாற்றலும் ஒற்றுமைப் பயனை அளிப்பதாம். குணமேயுடையார் உலகத்து அரியராகலின் ஒரு குடிப்பிறந்தாருள் ஒருவர் ஒருகால் மிகையாயின செய்வாராயின் அக்குடியிற் பிறந்த மற்றொருவர் மிகையாயின செய்தாரை வெறுத்தல் கூடுமன்றோ? அங்கிலைமையில் வெறுக்கு மவர்தாம், கண்ணுக் கணிகலமாம் கண்ணோட்டத்தினை யுடையராயின், அவர் குற்றத்தைப் பொறுத்தாற்றுவாராய்க் குற்றஞ்செய்தார் தாமும், தம்முடன் என்றும் போல ஒன்றிவாழ வாழுந் தன்மையினராவர், ஆதலின், கண்ணோட்டமும் ஒற்றுமையாகிய பலனளிப்பதொன்றாம். அன்பு, நாண் ஒப்புரவு, கண்ணோட்ட மிவைதம்மை யொருவ ருடையாரேனும் (தீமையாதொன்றுஞ் சொல்லாமையென்னும் இலக்கணத்ததாகிய) வாய்மை யவர்பக்கல் காணப்படாவழி யவரை அறிவுடையார் தம்முள்ளத்தினுள் வைத்தெண்ணார். எண்ணாமைக் காரணத்தான் அவர், பெரியார்தம் இனத்திருத்தலை யிழந்தவராவர். ஆதலின் வாய்மைக்குணனும் பலர் தம்முடன் ஒத்துவாழ்தற்குச் சிறந்ததாவதோடு கருவியுமாகும்.

இக்கூறியவாற்றான் ஒருவர் அன்புடையராய் நாண்பூண்டு, ஒப்புரவாற்றிக் கண்ணோட்டத்தோடு வாய்மைக்குணனுங்கொண் டொழுகுவாராயின் அவர் எல்லாரானு மவாவப்பட்டாராய்ப் பல்லாருடைய நட்பும் பெற்று ஒற்றுமை என்னும் உறுதிப்பொருளைப் பெறுவாராவர் என்பது தெளிவாகும். இனி யிப்பெற்றித்தாய ஒற்றுமை யுண்மை யின்மைகளான்வரும் பயன் ஆய்வாம்.

ஒற்றுமை யுண்டாகச் சேராப்பயன் எதுவுமின்றாம். ஒற்றுமைதான் முற்கூறிய அன்பு தொடக்கத்துக் காரணங்களானும் இன்சொற் கூறல் நட்புப் பூணலாதி பிற வேதுக்களானு மாவதோர் விளைவாதலின், ஒற்றுமைக் குணனுடையார், பிறர் இடுக்கண் கண்டுழித் தம்மானியன்றன

வியற்றி யவ் விடுக்கண்ணினைக் களைவாராகின்றனர். அவர்தம் செய்கையின் பயனுற்றோர் நன்றியறிதற் குணத்தராயின் அவர்தம் உயிர்களுக்கிரங்குந் தன்மைகண்டு அத்தகையாரோடு நட்பினராவர். இங்ஙனம் பலர் ஒருவருக்குத் துணையாயவிடத்து ஒவ்வொருவரும் அவருக்கு ஆக்கந்தருவினைகள் பலவற்றைச்செய்ய விழைவரன்றோ? அந்நிலையில் அவருக்கு வருவதோரிடுக்கணுமுண்டாகுமோ? உண்டாமாயினும் துணையாயினோர் வருந் துன்பத்திற்கே துன்ப மிழைப்பரன்றோ? இதனானன்றோ ஒருவர்

"உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்"

(குற. பெ. துணை 2) வேண்டுமென ஆசிரியர் திருவள்ளுவர் சொல்லிப் போந்ததூஉம்.

வையாவிக் கோப்பெரும்பேகன் தன் மனையாள் கண்ணகியைத் துறந்தவிடத்து அவடன்னை அவன் றன்னோடு வாழ்வித்தற்கருதிக் கபிலர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார், பரணர் முதலினோர் முயன்றனரன்றோ? பரணர்,

"மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக!
பசித்தும் வாரேம் பாரமு மிலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
யறஞ்செய் தீமோ வருள்வெய் யோயென
இஃதியாம் இரந்த பரிசிலஃ திருளின்
இனமணி நெடுந்தே ரேறி
இன்னா துறைவி யரும்படர் களைமே"

(புறம். 145) என்றதால் கண்ணகிதன் உற்றநோய் நீக்கிய தன்மை விளங்கக் கிடப்பதாம்.

(கண்ணகி காரணமாக ஏனைப்புலவர் பாடிய செய்யுட்கள்புறம் 143, 144, 146, 147-ல் காண்க)

மற்றும், புல்லாற்றூர் எயிற்றியனார், கோப்பெருஞ் சோழன் தன் மக்களோடு போர்புரிதற் கெழுந்தகாலத்து,

"மண்டமர ரட்ட மதனுடை நோன்றாள்
வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே!
பொங்குநீ ருடுத்தவிம் மலர்தலை யுலகத்து
நின்றலை வந்த விருவரை நினைப்பிற்
றொன்றுறை துப்பினின் பகைஞரு மல்லர்
அமர்வெங் காட்சியொடு மாறெதிர் பெழுந்தவர்

நினையுங் காலை நீபு மற்றவர்க்
கனையை யல்லை யடுமான் தோன்றல்
பரந்துபடு நல்லிசை யெய்தி மற்றுநீ
யுயர்ந்தோர் உலக மெய்திப் பின்னும்
ஒழித்த தாய மவர்க்குரித் தன்றே
அதனால், அன்ன தாதலு மறிவோய் நன்றும்
இன்னுங் கேண்மதி யிசைவெய் யோயே
நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
வெண்ணில் காட்சி யிளையோர் தோற்பின்
நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ்சு வையே
யமர்வெஞ் செல்வ நீயவர்க் குலையின்
இகழுநர் உவப்பப் பழியெஞ் சுவையே
அதனால், ஒழுகதி லத்தைநின் மறனே வல்விரைந்
தெழுமதி வாழ்கநின் உள்ளம ழிந்தோர்க்
கேம மாகுநின் றுணிழன் மயங்காது
செய்தல் வேண்டுமா னன்றே வானோர்
அரும்பெறல் உலகத் தான்றவர்
விதுப்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே"

(புறம்-213) என இசைத்துப் போரெழாமற் காத்தனரென்னு மிவ்வரலாறு நோயுறாமை முற்காத்ததனை விளக்கி நிற்பதன்றோ?

இவ்விரு காட்டுக்களானும் கண்ணகி, கணவன் பேகனோடும், கோப்பெருஞ்சோழன், தன் மக்களோடும் ஒற்றுமைப்பாடுடையராய் வாழ்ந்தமை யாராயுமிடத்து முறையே நேர்ந்ததும் நேரவிருந்ததுமாகிய துன்பங்கள் ஒழிந்தனவன்றோ? இதனான் ஒற்றுமையுண்டாக வாகும்பயன் இன்பமே என்பது தேற்றம். மேல் ஒற்றுமை யின்மையான் வரும்பயன் ஆய்வாம்.

ஒற்றுமை இல்லாவிடத்து இருப்பனவும் இன்றாக முடியும். துரியோதனனுள்ளிட்டார் நூற்றுவருக்கும் தருமராதி ஐவருக்கும் இடைநிகழ்ந்த நேயம் அறியாதார் யாரே? துரியோதனன் ஐவரையும் முடித்தற்குச் செய்த சூழ்ச்சிகள், உண்மையுணர்ந்து நடுநிற்பார், 'ஆ' ஆ!! பலப்பல என வுடல் நடுங்க வுள்ளமுருக வுரைத்திடுர் தன்மையனவன்றோ? தருமரோ தந்நேரிளங்கோ வீமன் "........அரவுயர்த்தோன் கொடுமையினும் மூரசுயர்த்தோய்! நினதருளுக் கஞ்சினேனே" எனக் கழறவும் காரணராகவன்றோ, திரௌபதி, தன் வண்டார்குழல் குலைய மானங்குலைய மனங்குலையக் கோச்சபையிற் கோ! கோ! வெனச் சோருங் கொடியாகத் துகிலுரியப் பெற்ற வந்நாள், வீமன் கதைமேற் கைவைக்க, விசயன் சிலைமேல் விழிவைக்க, இருவரும் தங்கருத்திற் சினம் மூட்ட "......முன்னம் பொறுத்தீரின்னம் பொறும்...(வில்லி. சூது. 230) என்றனர். தருமர் தம்பொறுமையினைக் கண்டேனும் துரியோதனன் ஒற்றுமையுடன் வாழ்தலை நினைத்

தனனே? இல்லையன்றே. அன்னாரைக் கானகத்துட் புகுத்தியும், ஆண்டும் அவர்க்கு இடையூறன்றோ பல விழைத்தான். இழைத்த இன்னல்களை யியல்பெனவே மதித்த தருமர், கழிக்கவிதித்தநாட்களிற் கானுறைந்து மீண்டுவந்து தம் உரிமையினை முறையிற்பெற விழைந்த காலத்தேனும் துரியோதனன், ஈனமிலாவகைவந்தார் நம் துணைவர் என விரங்கி அவர் தம் நாட்டினை யவர்க்குத்தர இசைந்தனனே? அவன் இசைந்தது போர் தொடுத்தற்கன்றே? தொடுத்த போரில், திரௌபதி யொருத்தி தன் குழலினை விரித்ததற் காரணத்தானே அந்தப்புரமாதர் பலரும் தத்தம் குழல் விரிக்கப் பொறைக்கடவுள் தருமர்முன் கூற்றுவன்வாய் வீழ்ந்தான் துரியோதனன் என்று ஒற்றுமையின்மையின் பயன் காட்டுதற்கு இலக்காக வன்றோ துரியோதனன் தன் கிளையோடும் கெட்டான்.

மேல் இக்கட்டுரையின் நோக்கங் கூறுவாம்:—

யாதாமொரு நாட்டின்கண்வாழும் பல வகுப்பினரும் ஒரு குடும்பத்தினரைப்போன்று ஒன்றுபட்டாலன்றி அந்நாடு நாடாகாது. நம் மிந்திய நாட்டிலோ பலமுகமான கொள்கையினையுடைய வகுப்பினர் பலரிருக்கின்றனர். இப்பலரும் அடைய விரும்பும் பலனே ஒன்றேயாகும். அவ்வொன்றனைப் பெறவே பல திறப்பட்ட கொள்கையினை யுடையாரும் தத்தம் கொள்கையினையே வற்புறுத்துவாரா நிற்கின்றனர். ஒவ்வொருவருக்கும் தத்தம் கொள்கையினை நழுவவிடுவதாவென்னும் எண்ணம் உண்டாவது இயற்கையே எனினும் ஒரு வகுப்பினைச் சார்ந்தார் தம் கொள்கையினையே பிறர்கொள நினைப்பாராயின் மற்றொரு வகுப்பினரும் தம்முடைய நோக்கத்தினையே பிறரும் தழுவுதல் வேண்டுமென நினைத்தல் இயற்கையே யன்றோ? ஆதலின் அனைவருக்கும் ஒன்றாய முடிபு எதுவோ அதனை முடிக்கக்கருதின் ஒவ்வொரு வகுப்பினரும் தம்முடைய கொள்கைகளைப் பிறரும் தம்முடன் கலத்தற்பொருட்டுத் தளர்த்திக்கொள்ளுதல் இன்றியமையாததாகும். தளர்த்துதல் பன்னாளாகக்கொண்ட பழக்கவழக்கங்களின் உரிமைக்கும், அடைந்துவரும் பலனுக்கும், பெருமைக்கும் கேடு அன்றோ என்று ஒருவகுப்பினர் நினைப்பின், அவ்வகுப்பினர் எதிர் வகுப்பினரான் ஏற்பட்ட விளைவினை ஆய்ந்துணரும் உணர்ச்சியொழித்து அவ்வகுப்பினரைத்தாக்குதல் வேண்டுமென்ற பேரவாவின் பெருக்கால் உள்ளனவும் இல்லனவும் கூட்டித் தம்மினத்தவர் கையொலிகூட்ட அவ்வகுப்பினரைக் குறைகூறுதல்தானே எழுவதாகும். இவ்வெழுச்சி, இருதிறத்தவர் செய்கையினையும் கண்டார்க்குக் கைகொட்டி நகையாடுதற் பயனளிப்பதோடு அவ்விருதிறத்தாருக்கும், தமக்குக் கிடைத்த அப்பத்துண்டை தம்முள் ஒற்றுமையின்றி ஒரு குரங்கின்பாற் கொடுத்துப் பாகம்பெற முற்பட்ட இரு பூனைகளுக்கு ஏற்பட்ட பலனையே யளிப்பதாகும். ஆதலின் தற்காலம் பெரும்பாலாருடைய உதவியைப் பெற்றவரின் பலாபலன்களை ஆய்ந்து, குறைகாணின் அவற்றை நீக்குதற்கேற்றனசெய்து வகுப்புத் துவேஷத்தை

விளைவிப்பனவற்றை வேரறக்களைந்து அனைவரும் ஒன்றுபடின் அவ்வொற்றுமைதானே உறுதிப்பயனை யளிப்பதாகும்.

இறுகாறும் கூறியவதனுன் ஒவ்வொருவரும் அன்பாதிகுணங்களிற் சிறந்து, ஒற்றுமை உண்மை யின்மையின் விளைவினையாய்ந்து, தத்தம் நலங் கருதாமல் ஓரினத்தவராக ஒற்றுமையுடையாராதல் வேண்டுமென்பதே யிக்கட்டுரையின் நோக்கமாகும்.

N. திருவேங்கடத்தையங்கார், தமிழ்ப்பண்டிதர்.
C. R. C. High School, Purasawalkam.

---

## நாலடியார் வசனம்.

(284-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 31-ம் அதிகாரம்—இரவச்சம்.

(யாசகம் செய்வதற்கு அஞ்சுதல்.)

தெளிந்த அறிவினையுடையோர், 'இந்தத் தரித்திரர் நம்மால்தான் செல்வமுடையவராவர்; தமது முயற்சியால் சம்பாதிக்கும் செல்வமுடையவரல்லர்' என்று தம்மைத்தாமே மேலானவராகக்கருதி மயங்கும் மனத்தையுடைய அறிவீனர்களின் பின்னுல்சென்று யாசகம் செய்வார்களோ? (யாசிக்கமாட்டார்.) (1)

ஒருவன் செத்துப் பிறக்கும் பிறவியானது, கண்ணை (ஒருமுறை) திறந்து மூடும் நேரத்திற்குள் அழியுந்தன்மையுடையதல்லவா? (ஆம். ஆதலால்) ஒருவன் இழிவிற்குக் காரணமாகிய யாசகத்தொழிலைச் செய்து வயிறாரச் சாப்பிடுவதைக்காட்டிலும், பழிக்கத்தக்க காரியங்களைச் செய்யாதவனுகிய மற்றொருவன் (யாசிக்க மனமில்லாதவனுய்ப்) பசியோடிருத்தல் குற்றமாகுமோ? (ஆகாது என்றபடி.) (2)

தரித்திரத்தின் காரணமாக யாசகம்செய்யத் துணிந்து, (அந்த) அற்பமாகியவழியில் போகாதவர் ஒருவரும் இலர். (ஆயினும்) மேன்மக்கள் (தாம் சென்றவுடனே தம்மைத்) தழுவிக்கொண்டு 'எமது வீட்டிற்கு வாருங்கள்; உண்ணுங்கள்' என்பவர்களிடத்திலேயல்லாமல் (பிறரிடத்தில்) முகம் காட்டிக்கொண்டு போவதைப் பொறுப்பார்களோ? (பொறுக்கமாட்டார்கள்.(3)

மேன்மக்கள் லக்ஷ்மி (தம்மைக்) கைவிட்டாலும் தெய்வம் கோபித்து வருத்தப்படுத்தினும் (சோர்வடையாமல்) ஊக்கங்கொண்ட மனத்தோடு மேன்மையை நினைப்பதேயல்லாமல், (லோபகுணத்தால்) பணத்தைப் புதைத்துவைக்கும் அறிவில்லாதவர்களின் பின்னுல்போய்த் தலை குனிந்து நிற்கமாட்டார்கள். (4)

யாசகத்தைப்பற்றி நினைக்கும்பொழுதே மனமுருகிவிடும். ஆகையால் (யாசகம்) வாங்கும்பொழுது (அதை) வாங்கும் யாசகருடைய எண்ணம்

எப்படியிருக்குமோ! (ஆதலால்) தம்மிடம்வந்து யாசிப்பவர்க்குத் தம்மால் தரக்கூடியதொன்றை ஒளித்துவையாத வலிய அன்பினையுடைய கண்ணை யொத்த மேன்மக்களிடத்திலும் யாசியாமல் வாழும் வாழ்க்கையே (நல்ல) வாழ்க்கையாம். (5)

'(நமக்குத்) துன்பங்களே வரட்டும்; இன்பங்கள் இல்லாமற் போகட்டும்' என்று தமது மனத்தைத் தாம் திருப்திசெய்துகொள்வதால் நீங்கிப் போகும்படியான வறுமையின்பொருட்டுப், பொருளாசையால் கவலைப் படுத்தும் மனத்தினுல் துன்பமடைந்து, அன்னியரிடம்சென்று யாசித்தல் என்னபயன் கருதியோ! ('செல்வமென்பது சிந்தையின் நிறைவே': 'போதும் என்ற மனமே பொன்செய்யு மருந்து': என்னும் பெரியார் வாக்கின்படி, செல்வமானது மனத்திருப்தியே. பொருளாசையால் அலையும் மனமுடையோன் எவ்வளவு செல்வமுள்ளோனுயினும் அவன் தரித்திரனே. ஆசையால் எப்பொருளிடத்தும் செல்லாத அடங்கிய மனத்தான் செல்வமில்லாதவனுனுலும் அவனே செல்வன்' என்பது கருத்து. 'இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக், கிடும்பை படாஅ தவர்' என்னும் குறட்பாவையும் நோக்குக). (6)

மலையின் அகன்ற இடங்களிலெல்லாம் அழகுமிகுந்த பாயுந்தன்மையுள்ள நீரருவிகள் பொருந்திய பாண்டியநாட்டரசனே! இந்த உலகத்தில் எக்காலத்தும் புதியவர்களாகப் (பலர்) பிறந்துகொண்டிருந்தாலும், யாசிப்பவர்களை இகழாத உத்தமனே என்றும் பிறவாதவனுவான். (பிறவித் துன்பமின்றி முத்தியடைவான் என்றபடி.) (7)

தன்னுடைய தரித்திரமானது, வெளியாகிய வுடம்பிலே வருத்தப் படுத்த, (அதனுல்) தன்மனத்திலுள்ளதாகிய நல்ல ஞானத்தை யிழந்து, (அறியாமையை) நிலைநிறுத்தி, (செல்வமுள்ள) ஒருவனை (யடைந்து),'எனக்குப் பொருள்கொடு' என்று யாசித்தகாலத்தில் (அச்செல்வன் கொடுப்பதில்லையென்று) மறுத்துவிடுவானுனுல், யாசித்த அவன் அவ்விடத்திலேயே இறவானே? (இறந்தவனுக்கே யொப்பாவன்.) (8)

(வறுமையுள்ள) ஒருவர் (செல்வமுள்ள) மற்றொருவரைச்சேர்ந்து (அவர் பிரியப்படி) நடந்து வணக்கத்தோடிருத்தலில் வல்லவராயிருப்பது கிரமமேயல்லாமல், பெருமைகெட்டு (பிறரிடம் சென்று எனக்கு) ஏதாகிலும் (உதவி) செய்யமாட்டீரா என்று சொல்லும் சொல்லைக்காட்டிலும் தாம் துன்பமுண்டாகச் செல்லும்வழி (துன்பவழியே) இனிமையானதாக இராதா! (யாசித்து உண்டு இன்பமடைவதைவிட வறுமையால் துன்பப் படுதலே சிறந்ததாம் என்பது கருத்து.) (9)

பழைய பழக்கம் காரணமாக (ஒருவர் மற்றொருவர்மேல்) அன்பு கொண்டவிடத்து, (நட்புக்கொண்ட அவருக்கு) யாதாயினுமொரு தக்க உதவியைச் செய்க. அவ்வுதவியை அவர் ஏற்றுக்கொள்ளாவிட்டால் (அச்

செய்கையானது) தமது மனதில் பதிந்து நீங்காமல் எரியும் நெருப்பாகும். (10)

## 32-ம் அதிகாரம்—அவையறிதல்.

(சபையிலுள்ளோரின் தன்மையையறிந்து அதற்கேற்றவாறு நடத்தல்.)

மெய்ஞ்ஞான நூல்களைக் கற்றவர்கள், (நிறைந்த) சபையில் சேரும் முறைமையைவிட்டு, அவ்விடத்து அறிவில்லாமைக் குரியதான ஒருவார்த்தையைக் கொண்டுவந்து எடுத்துச்சொல்லி, அந்த விஷயத்தை அவ்விடத்தில் மிகுதியாக விவரித்து, அற்பமாகிய அறிவைக்கொண்டு ஒழுகும் குற்றமுள்ள அறிவையுடையவர்களுக்கு முன்பு, யாவரும் புகழ்ந்து கூறும் தமது ஞானத்தை (ஒருவர்) தளரவிடக்கடவர். (மூடர்களினெதிரில் விவேகிகள் தமது ஞானத்தைச் சொல்லலாகாது என்பது கருத்து.) (1)

அடக்கமுள்ள பெரியோர், வாய்க்குவந்த பாடங்களை எடுத்துச் சொல்லி நல்ல நூற்பொருள்களை யறிந்தவர்போலக் (காட்டிக்கொண்டு) கூட்டஞ்சேர்க்குந்தன்மையுள்ள கெட்ட அறிவினையுடைய புலவனைச் சேரமாட்டார். (ஏனெனில்) கெட்ட அறிவையுடையவன் (கேட்பவர் மனம்) வருந்தும்படி சபையில் (அவர்களது) குடியைப் பழிப்பான். இல்லாவிட்டால் தோள்களைத் தட்டிக்கொண்டு (சண்டைக்குக்) கிளம்புவான். (2)

(பிறரது) கல்விச் சமர்த்தையும் (பேசுதல் முதலியவற்றிலுள்ள) திறமையையும் தாம் அறியாதவராய், (தமது) சொற்களாகிய முள்ளங்கோல்களைக்கொண்டு தினவுகொண்டு (வாதஞ்செய்ய) எழுந்திருப்பதை விரும்புவார்கள்; தாம் கற்றறிந்தவைகளை (பிறர் மனத்திற்) புகும்படி செய்யும் வழியை யறியார்கள்; தோல்வியுண்டாகுமென்பதையும் அறியார்கள்; (இவ்வாறு) அநேக வார்த்தைகளை (வீணாகச்) சொல்லும் மனிதர் பலர் (உண்டு). (3)

அறிவிலானொருவன் (தான்) கற்றது சிறிது மில்லாமல், பாடசாலையில் படிப்பவர்கள் சொல்லும் வாய்ப்பாடத்தைக்கேட்டு அதனால் ஒரு சூத்திரத்தை யறிந்துகொள்வானானால், அச்சூத்திரத்தை அறிவுடையோரிடையிற்போய் வெட்கமில்லாமல் சொல்லித் தனது அற்பவறிவைக் காட்டிவிடுவான். (4)

வெற்றியடைய வேண்டுமென்னுங் காரணத்தால் மிருகங்களைப்போல உண்மைப்பொருளைக்கொள்ளாமல் மிகக் கோபித்துச் (சண்டைக்குச்) சித்தமாய் மனங்கொதிப்பவர்களாகிய தீயவர்களுடன் சேர்ந்து, தம் சொல்லின் சாமர்த்தியத்தைக் காட்டப் பிரயத்தனப்படுபவர்கள் தம்முடைய பற்கள் சுரைவிதைகளைப்போலத் தம் கையிலிருக்கக் காண்பார்கள். (மூடர் அறிவுடையோரின் உறுதிமொழிகளை ஏற்றுக்கொள்ளாமல் உபேக்ஷை செய்வதுமன்றி அவர்கள் பற்களை யுதிர்த்துக் கையில் கொடுப்பர்.) (5)

ஒரு பாட்டின் மூலபாடத்தைமாத்திரம் வாய்ப்பாடமாகச் சொல்லி, அதன்பொருளை ஆராய்ந்தறியமாட்டாத மூடர்கள் வெறுக்கத்தக்க குற்ற

மான சொற்களைச் சொல்லும்போது, அழிவில்லாத சிறப்பையுடைய அறிவாளிகள் வெட்கங்கொண்டவர்களாய் (அந்த) மூடர்களைப் பெற்றவளுக்காக மிகவும் மன மிரங்குவார்கள். (6)

நூல்களானவை, வேசிகளின் தோள்களைப்போல (படிக்கிற) வழியிலே யிறங்கிக் கற்பவர்களுக்கெல்லாம் எளிதில் கைக்கொள்ளத் தக்கவையாம். (ஆனால்) அந்த நூல்களின் பொருள்கள், தளிர்போன்ற அந்த விலைமாதருடைய மனம்போல எவர்க்கும் உணர்தற்கரியவையாம். (7)

புத்தகங்களை மிகுதியாகச் சேர்த்துவைத்தும் அவற்றின் பொருள்களை அறியாதவர்கள் (புத்தகங்களைக்) கொண்டுவந்து வீடெல்லாம் நிறைத்து வைத்தாலும், (அவற்றைப்) பாதுகாக்கும் புலவரும் வேறு; அவற்றின் பொருளைப் (பிறர்க்கு) அறிவிக்கும் புலவரும் வேறு. (8)

கூட்டமாகிய காட்டுப்பசுக்களை (மேய்ப்பர்) சேர்த்துவைக்கும்படியான நீண்ட மலைபொருந்திய நாட்டையுடைய பாண்டியனே! பொழிப்புரை, விரிவுரை, நுட்பவுரை, எச்சவுரை என்னும் இந்த நான்கால் நன்றாக ஆராய்ந்து ஒரு நூலினுடைய விரிவான பொருள்களை (விளக்கிக்) காட்டாதவர்களுடைய உரையானது பழிப்பில்லாத நல்ல வுரையாகுமோ? (ஆகாது.) (9)

நற்குடியில் பிறவாதவர்கள் எவ்வளவு நூல்களைக் கற்றாலும் பிறருடைய சொற்களை (இகழாமற்) காத்தற்குரிய (அடக்கம் முதலிய) சாதனங்களை யுடையவராவரோ? (ஆகார்); நற்குடியிற் பிறந்த நல்லறிவுடையோர் (முன்னோர்) சொன்ன நூல்களின்பொருளைத் தெளியாதவர்களுடைய அற்ப வறிவைத் தாங்கள் (மேற்கொண்டு) அறிந்துகொள்வதில்லை. (10)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## பகவத்கீதை வசனம்.

(291-ம் பக்கத் தொடர்ச்சி.)

[முன்மொழிந்த அதிஷ்டானாதிகட்கே சர்வகர்மங்களின் கருத்தாத்தன்மைகூடலின், அசங்க ஆன்மாவிற்குக் கருமங்களின் கருத்தாத்தன்மையின்றாம். இவ்வண்ணம் ஆன்மாவின்கண் அகர்த்தாத்தன்மை ஞானமும் அதிஷ்டானாதிகளிற் கர்த்தாத்தன்மை ஞானமுமே அவ்வைந்தின் நிரூபண பலமாம்; அப்பயனை யிப்போது ஸ்ரீ பகவான் ஆன்மாவைக் கர்த்தாவென வெண்ணும் மூடரையிகழும் வாயிலாகக் கூறியருளுகின்றார்.]

ஹே அர்ச்சுன! அச்சர்வகர்மங்களிலும் அதிஷ்டானாதிகளால் ஜன்யத்தன்மையிருந்தபோதினும் எம்மூடன் அசங்க உதாசீன ரூபமேயாகிய ஆன்மாவைக் கர்த்தாரூபமாய்க் காண்பனோ, அத்துர்மதி சாஸ்திர ஜன்னிய விவேகபுத்தியற்றவனாதலிற் காணான்.

ஹே அர்ச்சுன! முற்கூறிய தரும அதருமரூப சர்வகருமங்களிலும் கூறிய அதிஷ்டானுதிகளானே ஜன்னியத்தன்மை சித்தமாயினும் உண்மையாய்ச் சங்க உதாசீனரூபமேயாய ஆன்மாவை யெம்மூடன் கருத்தாவாய்க் காண்கின்றனனே; அதாவது சர்வ ஜடவுலகையும் விளக்குவதும், இருப்பு விளக்கவடிவமும், சுவப்பிரகாச பரமானந்தகனமும், பாதமற்றதும், அசங்கஉதாசீனமும், அகர்த்தாவும், அவிக்கிரியமும், அத்விதீயமும், ஆகி யுண்மையாயிருப்பினும் ஆன்மா அவித்தையினுனேமொழிந்த அதிஷ்டானுதிகளில் பிரதிபிம்பிதமாம். சூரியன் நீரில், பிரதிபிம்பித்தலேபோலும். நீர்முதலியவற்றை விளக்கும் சூரியன், அவற்றினும் அயலாயினும் நீரோடு சூரியனுக்குத் தாதாத்மிய பாவத்தைக் கற்பித்து மூடன் ஜலத்தின் சலனத்தால் சூரியன் சலிப்பதேயாக எண்ணுகின்றதேபோல அதிஷ்டானுதிகளை யொளிர்விக்கும் அசங்க அத்விதீய ஆன்மாவிற்கு அதிஷ்டானுதிகளோடு தாதாத்மிய பாவத்தைக் கற்பித்து அவற்றின் கருமத்தை ஆன்மாவின்கண் ணூரோபித்து யானே கருத்தன் எனச் சருவசாக்ஷிரூபமாய் ஆன்மாவையும் கிரியைக்காசிரயமாகக் காண்பன். கருத்திதுவாம்:—இரஜ்ஜுவின் உண்மைவடிவத்தை புணராமல், சர்ப்பமாய்க் காண்பதேபோல ஆன்மாவினுண்மையாய அசங்க அகர்த்துருரூபத்தைக் காணுமல் அவித்தையினுனே அதனைத் தேகாதிகருமாசிரயரூபமாய்க் காணும் மயக்கமுடையவன் இவ்வண்ணம் ஆன்மாவைக்காணினும் கண்டிலன். இரஜ்ஜுவைச் சர்ப்பரூபமாய்க் காணினும் மயங்கியவன் கண்டிலாததே உண்மையாய் அசங்க உதாசீன அகர்த்தான்மாவைக் கர்த்தாரூபமாய்க் காணினும் மயங்கியவன் கண்டிலன். மூடன்மயக்கத்தானே யான்மாவை விபரீதமாகவே காண்பன், உண்மைவடிவத்தைக் காணுன் என்பதில் ஏதுயாதாம் எனச் சங்கையருச்சுனனுக் குண்டாக ஸ்ரீ பகவான் அவ்விபரீத தரிசனத்தின்கண் ஏதுவைக் கூறியருளுகின்ருர்:—குருசாஸ்திர வுபதேசத்தானே உண்டாகாத விவேகமதி யெவனுக்கோ அவன் அகிருதபுத்தியாம்; அத்தகையனுதலின் அவன் ஆன்மாவை விபரீதமாகவே காண்பன்; அதாவது உண்மையாய் அசங்க உதாசீன அகர்த்தாரூபமாயினும் ஆன்மாவை மயங்கியவன் கருத்தாரூபமாகவே காண்பன். கருத்திதுவாம்:—இரஜ்ஜுவின் உண்மை வடிவம் சாக்ஷாத்தாகப்பாராதவரை பாம்புமயலை எவ்வுபாயத்தானும் நீக்கிக்கொள்ள முடியாததேபோலச் சத்தியஞான அநந்த அகர்த்தா அபோக்தா பரமானந்த மூவவத்தையற்ற அசங்க உதாசீனப்பிரஹ்மம் யானெனப் பிரஹ்மசாக்ஷாத்காரம் குருசாஸ்திர உபதேசத்தானே உண்டாகாதவரை அக்கர்த்திருத்துவமயலை எவ்வுபாயத்தானேனும் நீக்கமுடியாதாம். குருசமீபஞ்சென்று வேதாந்தவாக்கியத்தை விசாரித்து இங்ஙன் பிரஹ்மான்மசாக்ஷாத்காரத்தை யேன் உண்டாக்கிக்கொள்ளவில்லை யென்றுண்டாம் அருச்சுனன் சங்கைக்கு விடை யருளுகின்ருர்:—விவேகத்தின் றடையாகிய பாவ கருமங்களானே அசுத்த அந்தக்கரணமுடையவன் துர்மதியாவன்; அதனுனே பிராந்தன் குருவையடைந்து சிரவணஞ் செய்திலன். கருத்திது

வாம்:—பாவகருமங்களானே அசுத்தபுத்தியையுடையவன் ஆகலின் நித்தியாநித்திய வத்துவிவேகாதிகள் இன்மையினுனே பிரஹ்மான்ம ஞானத்திற்குத்தகாமையானே அவித்தையான் மயங்கியோன் அகர்த்தாரூப ஆன்மாவையும் கர்த்தாரூபமாய்க் கற்பித்தும், கேவலரூப ஆன்மாவை அகேவலரூபமாய்க் கற்பித்தும், கருமகருத்தா ரூபமாகிய அதிஷ்டானுதிகளில் தாதாத்மிய அபிமானத்தானே கருமங்களைத் தியாகஞ்செய்வதில் அசமர்த்தனுகி யதனுனே சம்சாரி கருமத்தினதிகாரி தேகபிருத்து அகிருத புத்தியென்பனவாகப் பல பெயர்களையுற்று எல்லாவகையானும் ஜன்ம மரண அடைவானே அநிஷ்ட இஷ்ட மிசிரம் என்னும் மூவகையாய கரும பலத்தையே யனுபவிப்பன். இத்துணையானே தேகாதிகளினும் வேறுகிய ஆன்மாவையே கேவலம் கர்த்தாவாகக் காணும், தார்க்கிகனும் அகிருத புத்தியேயென் றறிகவென்னும் பொருள் அறிவித்தருளப்பெற்றதாம் ஒரு வாதியோ இதற்கு இப்பொருள் செய்வன்:—ஆன்மா கேவலம் கருத்தாவன்றும்: மற்றே, முன்மொழிந்த அதிஷ்டானுதிகளோடுசேர்ந்த ஆன்மா கருத்தாவாம்; இவ்வாறுண்மையாய் அதிஷ்டானுதிகளோடுகூடிக் கர்த்தாத்தன்மையை யடைவுற்ற ஆன்மாவைக் கேவலம் கர்த்தாவாகக் காண்பவன், அதாவது அதிஷ்டானுதிகளின் சம்பந்தமின்றிக் கேவலம் ஏக ஆன்மாவையே கர்த்தாவாகக் காண்பவன் துர்மதியாவன். இவ்வாறுய பொருள் கேவலம் என்னும் சப்தப் பிரயோகத்தானே சித்தமாம். இவ்வாதி பொருள் நல்லதல்லவாம். ஏனெனின் சர்வக்கிரியைகளு மற்ற அசங்க ஆன்மாவிற்கு அதிஷ்டானுதிகளோடு சேர்க்கையே கூடாதாம். ஜலசூரியனைப்போல அவற்றேடு அசங்க ஆன்மாவிற்கு அவித்தையின் சம்பந்தத்தாலுண்டாய கலப்புடன்படினு அங்ஙன் சேர்தலான் ஆன்மாவின் கண் அக்கர்த்துருத்துவமும் அதிஷ்டானுதிகள் யாவும் ஆவித்யகமேயாம்; கற்பித அவற்றேடு ஆன்மாவின் வாஸ்தவசம்பந்தத்தன்மை சம்பவியாதாம். கேவலம் என்னும் சப்தமோ, இயற்கையானே சித்தித்த ஆன்மாவின் அசங்க அத்விதீய வடிவத்தை அனுவாதஞ் செய்கின்றது ஆன்மாவைக் கர்த்தாவென அங்கீகரிப்பவன்பால் துன்மதித்தன்மையை புணர்த்தும் பொருட்டாம்; ஆகையாற் கேவலம் என்னும் சப்தத்தானே வாதியினர்த்தஞ் சித்தியாதாம்.

[அருளிய நான்கு சுலோகங்களால் 12 வது சுலோகத்தின் மூன்று பாதங்களை வியாக்கியானித்தருளி இப்போது நான்காவது பாதத்தை வியாக்கியானித் தருளுகின்றூர்] (முக்கிய சந்நியாசிகட்கோ ஒருகாலும் அம்மூவிதபலன் அடைவுறுவாம், என்பது 12 வது சுலோகத்தின் நான்காவது பாதமாம். ஆனந்தபோதினி 210 வது பக்கம்.)

ஹே கௌந்தேய! எவ்வறிஞனுக்கு யான் கருத்தாவென்னும் விருத்தி யுண்டாகவில்லையோ, மதிபற்றுறுவதில்லையோ, அவ்வறிஞன் இவ்வுலகங்களைக் கொன்றும் கொல்வதில்லை; பந்திக்கப்படவுமாட்டான்.

ஹே பார்த்த! முற்சுலோகத்திற்கூறிய துர்மதியினும் அத்தியந்த

விலக்ஷண அதிகாரியானவன் பூர்வபுண்ணிய கருமத்தானே விவேக விரோதியாய பாவகருமங்களை யொழித்து விவேக வைராக்கிய சமாதி ஷட்சம்பத்து முமுக்ஷுதையென்னும் நான்கு சாதனங்களை யடைந்து குருசாஸ்திர உபதேசத்தானே உண்டாய அகர்த்தா, அபோக்தா, சுவப்பிரகாச, பரமானந்த, அத்விதீயப் பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்ம சாக்ஷாத்காரமடைந்தவனுக்கு அகங்காரபாவம் நஷ்டமாம்; அதாவது தத்துவ சாக்ஷாத்காரத்தானே காரியசகித அஞ்ஞானம் பாதிதமாகவே யான் கருத்தா என்னும் விருத்தி ஒருகாலும் உண்டாகாதாம். தத்துவ வேத்தாவினுடைய சற்பாவம் அகம் எனக் கூறல் தகுதியல்லவாம். ஏனெனின், தத்துவசாக்ஷாத்காரத்தானே அகங்காரம் பாதமாகவே தத்துவஞானியின் சுத்தசொரூபமாத்திரமே எஞ்சியதாய் நிற்கும். அதன்கண் மனவாணியின் விடயத் தன்மையில்லையாம். தத்துவமுணர்ந்தவனுக்கு அகங்காரத்தன்மையாகிய தாதாத்மிய அத்தியாசமின்றாம்; ஏனெனின், தத்துவவேத்தாவின் றாதாத்மிய அத்தியாசம் விவேகத்தால் நீங்கிவிட்டதாகும். விவகாரகாலத்திற் றத்துவவித்தின்கண்ணும் பாதித அனுவிருத்தியானே கருத்தாத்தன்மை தோற்றுமாயினும் இவ்வாறு ஆராய்ந்து தன்னான்மாவின்கண் கர்த்தாத்தன்மையை எண்ணான்; மற்றோ, முன்மொழிந்த அதிஷ்டானாதிகளிலே கர்த்தாத்தன்மையை யெண்ணுவன். அவ்வாராய்ச்சி:—சர்வான்மரூப என்னிடத்தில் மாயையாற் கற்பிக்கப்பட்ட அதிஷ்டானாதிகளைக் கற்பித சம்பந்தத்தானே சுவப்பிரகாச அசங்கசைதன்யனாகிய யானே யொளிர்விக்கின்றேன். அதிஷ்டானாதிகளே சருவகருமங்கட்குங் கருத்தாவாம் அசங்கனாகிய யான் ஒருகாலும் கருத்தாவல்லன். யான் அக்கருத்தாவிற்கும் வியாபாரங்கட்கும் சாக்ஷி பூதன். கிரியாசக்தியையுடைய பிராணரூப உபாதியும், ஞானசக்தியையுடைய அந்தக்கரணரூப உபாதியும் அற்றவன் சுத்தன், சர்வகாரியகாரண சம்பந்தமற்றவன், கூடஸ்த நித்தியன், சர்வ துவைதமற்றவன், ஜன்மமரணாதி சர்வவிகாரங்களுமற்றவன். இத்தகைய எனது சொரூபத்தைச் சுருதிகளும் ஸ்மிருதிகளும் பிரதிபாதிக்கின்றனவாதலின் அசங்க ஆன்மாவாகிய யான் கருமங்களின் கருத்தாவல்லேன் என ஆராய்ந்து தத்துவமுணர்ந்தவன் அசங்க ஆன்மாவைக் கருத்தாவென வெண்ணாது கூறிய அதிஷ்டானாதிகளையே கருத்தாவென வெண்ணுவன். இதனானே யவனது மதி பற்றடைவதில்லை. அதாவது, தத்துவவேத்தாவின்மதி அனுசயவாலியாகாதாம். இக்கருமத்தை யான் செய்கின்றேன்; இதன்பயனை யான் அநுபவிப்பேன் என்னும் அநுசந்தானம் கர்த்தா போக்தாத் தன்மையின் வாசனைவடிவ நிமித்தத்தானே ஜன்னியமாம். அவ்வனுசந்தான ரூபப்பற்றிற்கு அனுசயமெனப் பெயராம். அது புண்ணிய கருமத்திலோ ஹர்ஷரூபமாம் பாவகருமத்தில் பச்சாத்தாபரூபமாம் என்னும் இருவகை இலயத்தால் தத்துவஞானியின்புத்தி பொருந்தாதாம். ஏனெனின் அகர்த்தா அபோக்தாவாகிய ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தானே கர்த்துருத்துவ போக்துருத்துவ முதலியவை நீங்கிவிட்டனவாமாதலின் அவன் மதி பற்றுறாதாமென் றுணர்க. (தொடரும்.) சீடன்.

## "தெய்வ வணக்கத் தத்துவம்"

இப்பூவுலகின்கண் தோன்றும் ஒவ்வொரு தேகத்திலும் நெஞ்சப் பள்ளமிருக்கும் இடத்திற்கு நேரே உட்புறமாக (தொண்டைக்குக் கீழும், நாபிக்கு மேலுமாக) மாமிசத்துடனும் நரம்புகளுடனும் கூடிச் சிவந்த நிறத்தையுடைய ஓர் உறுப்பு இருக்கிறது. அது இருதய கமலமென்றும், தாமரைக்கமலமென்றும் சொல்லப்படும். அந்தக் கமலத்தை இரு பிளவாக நேரே அறுப்போமானால் ஆலிலை எவ்வாறிருக்கிறதோ அவ்வாறிருக்கும். அதன்மத்தியில் ஓரங்குலப்பிரமாணம் காலியான இடமுண்டு. அவ்விடத்தை ஆகாயமென்றும், அதன்மத்தியில் பரமாத்மா சூட்சுமஸ்வரூபியாக இருக்கிறாரென்றும், அவ்விடத்திலிருந்து உஷ்ணமுண்டாகி ஜீவர்கள் புசிக்கும் ஆகாராதிகளை ஜீர்ணமாக்குகிறதென்றும் அறிஞர் கூறுவார்கள். அந்த இருதயகமலம் ஆலிலைபோன்றதாயும், பரமாத்மாவிற்கு ஆதாரமாயும் இருப்பிடமாயு மிருப்பதால் அக்கருத்தையே பெரியோர் கடவுள் ஆலிலையில் பள்ளிகொண்டார் என வழங்கி வருகின்றனர். அந்த இருதய கமலத்தின் தலையானது நெஞ்சின் வலதுபக்கமாகவுள்ள ஓர் நரம்பில் பொருந்தியிருக்கிறது. அந்த மர்மத்தைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு உலகில் ஜனங்கள் தெய்வவணக்கம் செய்யுங்கால் ஆலிலையை வைத்து வணங்க மனம் சம்மதியாமல் ஆலிலையைப்போலிருக்கும் வெற்றிலையை வைக்கும் படியும், மேற்கூறிய நரம்பானது எப்பக்கம் பொருந்தி யிருக்கிறதோ அப்பக்கமாகிற வலதுபக்கமே அதன் காம்பை வைக்கவேண்டு மென்றும் சொல்லி அவ்வாறே வைத்து வருகிறார்கள். இவ்விதமாக வெற்றிலையை வைத்து, அதன்மேல் பாக்கை வைக்கிறார்கள். இப்பாக்கானது முதலில் வெண்மையாக வுள்ளது. இவ்வெண்மையானது ஸத்வகுணரூபியான பரமாத்மாவைக் குறிக்கிறது. ஸத்வம் வெண்மையானது. பரமாத்மா எவ்விதம் மாயை என்கிற அழுக்கினால் மறைவுபட்டு உலகில் ஜீவாத்மாவாக ஜனிக்கிறதோ அவ்விதமே ஸத்வமாகிற வெண்மையான பாக்கைச் சீவி மாயை என்கிற சாயத்தில் நனைத்து அதை வெற்றிலையின்மேல் வைக்கிறார்கள். இதனால் மாயாசம்பந்தமாக உதித்துத் தோன்றும் ஜீவன்கள் தம்முள் இருக்கும் பரமாத்மா இவ்விடத்தி லிருக்கிறார்; அவரைக் கண்டுகொள்ளவேண்டுமென்பதைக்காட்டுகிறார்கள். பின் அவரை எப்படியிருந்து காணவேண்டு மென்பதைக் காட்டுவிப்பதுபோல் புஷ்பத்தைச் சூட்டுகிறார்கள். அதனால் ஆத்மாவும் மனமும் பூவும் வாஸனையும் போல ஒத்திருக்குமென்றும், காற்றுவீச வாஸனை எவ்விதம் பரவுகிறதோ அவ்விதமே இந்திரியங்களென்னும் காற்றுவீச, மனமென்னும் வாசனை அலைபுமென்றும், வாஸனை பூவில் எவ்விதம் அடங்கியிருக்கிறதோ அவ்விதமே மனமும் விஷயங்களி லோடாமல் அடங்கியிருக்க வேண்டுமென்றும் தெரிவிப்பதாகும். அவ்வாறடக்கிப் பின் யாதுசெய்வதெனின் அந்த இருதயகமலத்தைச்சுற்றி மாலையைப்போல் இடகலை பிங்கலை எனும் நாடிகளுண்டு. அந்த நாடிகளை சற்குருவினால் தெரிந்து கண்டுகொள்ளவேண்டு மென்பதைப் போல் இருபுறமும் இரண்டு வாழைப்பழங்களை வைக்கிறார்கள். பழங்களையும் சிறிது தோலை உரித்துவைக்கிறாகள். அதனால் ஷை நாடிகளைப் பிடித்து யோகாப்பியாசஞ் செய்துவந்தால் அந்நாடிகளின் வழியாக அநேக வித நாதங்கள் தோன்றுமென்பதைக் காண்பிக்கிறார்கள். மேற்கூறியபடி அப்பியாசித்து இந்திரிய வியவகாரங்களின்றி மனமடங்கி ஸாத்வீகமாய் நடந்துவந்தால், அத்தன்மையை அறியாதவர்கள் உலகில் வெறும்

புரளிகளைச் சொல்லித் தூற்றுவார்கள். அப்புரளிக் கொப்பாகச் சாம்பிராணியை நெருப்பில் போட்டுப் புகையைக் கிளப்புகிறார்கள். இப்புகையாகிற அப்புரளிக்கு இடங்கொடுக்கலாகாது. புகையானது கண்ணிற்பட்டுக் கண்ணெரிச்சலுண்டானாலும் அதையும் கவனியாது எவ்விதம் கண்ணை மூடிக்கொண்டாகிலும் தணலை எரிய ஊதிவிடுகிறோமோ அவ்விதமே புகையாகிய புரளி கிளம்பினாலும் தணலாகிய பரமாத்மாவைக் காண வேண்டுமென்கிற நிச்சயத்துடனிருந்து அப்புரளிக்கு அஞ்சலாகாது என்பதை இது விளக்கும். இவ்வாறு சாம்பிராணிப் புகையைக்காட்டிப் பின் தேங்காய் உடைக்கிறார்கள் இதில் முதலில் தேங்காயின் மேலுள்ள நாரைப்போக்கி பின் உடைக்க ஆரம்பிக்கிறார்கள். அதனால் தாமஸமென்னும் நாரைப்போக்கி, ராஜஸமென்னும் கெட்டியான ஓட்டை, சிரத்தையென்னும் அரிவாளால் வெட்டி உடைத்து, ஸத்வமென்னும் வெண்மையான தேங்காயை எடுக்க, அதில் பிராணனென்னும் தண்ணீர் வெளிவருவது விளங்கும். அத்தண்ணீரைக் கீழே விட்டுவிடாமல் பாத்திரத்தில் பிடித்து தீர்த்தமாககொள்ளுகிறார்கள். இவற்றால் தாமஸ, ராஜஸமென்னும் இரு குணங்களையும் நீக்கி, ஸத்வமென்னும் குணத்தையடைந்து பிராணனென்னும் அரிய வஸ்துவைக்கண்டு அதை எவ்வாறு பரம்பொருளிடத்தில் ஐக்யப்படுத்தவேண்டுமென்பதையும் உலகில ஜீவன்கள் தோன்றிப் பின் அவை மறைந்து எவ்விடம் போய்ச் சேருகின்றன என்பதையும் விளக்கிக் காட்டுவது விளங்கும். மேற்கண்டவைகளை வைத்துக் கடைசியாகச் சூடம் கொளுத்துகிறார்கள். சுடர் எரிந்து கடைசியில் எவ்விடத்திலிருந்து வந்ததோ அவ்விடத்திலேயே ஐக்யமாகின்றது. இதனாலே ஜீவன்கள் எந்த வஸ்துவினிடத்தில் இருந்து தோன்றியதோ அந்த வஸ்துவினிடமே அதாவது பரப்பிரமத்தினிடமே (உலக வியவகாரங்களிற்சென்று பற்பல சுகதுக்கங்களையும அனுபவித்து) கடைசியாகப் போய்ச் சேரவேண்டுமெபதை நாம் அறிகிறோம் தேங்காயை உடைத்துவிட்டதின் பிறகு மூடலாகாதென்று சொல்லுகிறார்கள். அதனால் ஷை தாமஸ ராஜஸ குணங்களைநீக்கி ஸத்வகுண மடைந்ததும் அதிலிருந்து கீழ்ப்படியிலிறங்காமல் மேல்படியைத்தான் அனுசரிக்கவேண்டு மென்பதாம். இவ்விதமாக பிரமத்தில் ஐக்கியமடையும் மார்க்கத்தைத் தெரிந்ததும் அதிலேயே யிருந்துகொண்டு யாதொரு களங்கமுமின்றி நிஷ்களங்கமான மனதுடன் உலக வியவகாரங்களை அதாவது ப்ராரப்தகர்மத்தைச் செய்துமுடிக்க வேண்டுமென்பதுபோல் ஆராதனைகளைச் செய்து முடித்ததும் முன் கூறியவற்றை எடுத்துப் பலருக்குச் சாப்பிடக் கொடுக்கிறார்கள். இவ்வித சொல்லொணா அரிய ஆராதனை (தெய்வ வணக்கம்) ஆகிய இவ்விஷயங்களின் கருத்து இன்னதென்றறியாது அநேகர் மயங்குகிறார்கள். இவ்வித ஆராதனை செய்வோர்களிலும் இதன் உட்கருத்து புலப்படாது அநேகர் தயங்குகிறார்கள். இனி உண்மையறிந் தொழுகுவோமாக.

து. அரங்கராஜ். உறையூர், திருச்சி.

---

## ஆகாரத்தைப்பற்றிய ஓர் அபிப்பிராயம்.

காலவிதத்தியாசத்தா லெவ்வித இடையூறுகளிருப்பினும் அவற்றையொரு பொருட்படுத்தாது, சதா பரோபகாரத்தையே மேற்கொண்டு எம்போன்றவர்க்கு இம்மை மறுமைப் பயன்களை அடைதற்குரிய நன் மார்க்கங்களை அறிவித்துக் குறைந்த சந்தாவிற்கே பிரதிமதிதோறும் உற்சாகத்துடன் வெளிவந்து நிலவிவரும் நம் மன்பார்ந்த ஆனந்தபோதினி, கடந்த

கார்த்திகைத் "16-11-1924" திங்களில் "நொறுங்கத் தின்றால் நூறிலும் சாவில்லை" என்ற மகுடம் சூட்டியவொரு வியாசத்தையும் தாங்கிவரக் கண்ணுற்றனம். இது, "நொறுங்க உண்டால் நோயற்றுப்போம்" என்று வேறுவகையாகவும் வழங்குகிறது. மேற்கூறிய வதன் கருத்தாவது:—

"நாம் உண்ணும் உணவை நன்றாக மென்று தின்றால் நூறுவயதிற்கு மேலும் பிழைத்திருக்கலாம்" என்பதாம். சிலர் இதற்கு "நொறுங்கத் தின்றால்—அதாவது கண்டது கடியது எல்லாம் வித்தியாசம் பாராமல் மனம்போனவாறு உண்டால் ஆயுள் அதிகமாகும்" என, வேறுவிதமாகப் பொருள் கூறுகின்றனர்.

இவற்றால், பிற்கூறியது வியாஸகர்த்தாவின் கருத்தின்படி உண்மையான ஷை பழமொழியின் சாராம்ஸத்தை நன்குணராதவரின் கூற்றேயாகும். முற்கூறியதே பொருத்தமுடையதாம். ஆனால், இதற்கு வேறொரு உரை யிருக்கின்றது. அது இதைக்காட்டினும் சிறந்ததாகு மென்பது எனது துணிபு. அதாவது:—

நொறுக்காமலே யுண்ணக்கூடிய பழம், பாயசம் முதலிய ஜட ஆகாரங்களும், பஞ்சாமிர்தம், பாகு முதலிய ஜல ஆகாரங்களு மிருக்கின்றன; நொறுக்கி உணணத்தக்க கடின ஆகாரங்களு மிருக்கின்றன. இவற்றுள் நொறுக்கி யுண்ணச் சக்தியற்ற குழந்தைகடகு மெல்லிய ஆகாரங்கள் மட்டுமே உபயோகிக்கப்படுகின்றன. தந்தங்களறற வயோதிகரும் மெல்லிய ஆகாரங்களை உபயோகிக்கினறனர். கடின ஆகாரங்களை உண்ணவேண்டின் அவறறிற்கென்றே சிறு உரல் முதலிய கருவிக ளமைததுககொண்டு நசுக்கியே உண்பர். பல் உள்ளவர்கள் மட்டும் இருவகைகளையு முண்பர். அப்படி உண்ணும்போது கடின வஸ்துக்களை மென்று தின்னுவார்கள்; மற்றவற்றை விழுங்குவார்கள். ஆகவே எல்லாரித்திலும மென்று தின்பது அமையாததாகின்றது. ஆதலின, 'நொறுஙக' என்பதற்கு, 'ஜீரணிக்க' என்று பொருள் கொணடு "நாம் உணவை எடுத்துககொளளத் தொடங்குமபோது, முன் நமமால் உண்ணப்பட்டவை உடமபினுள் ஜீரணித்திருககின்றனவாவென, அன்னங்களை, * மெய்பபசி, உதராக்னியதிகரித்தல் முதலிய குறிகளை நன்கு ஆராய்ந்து, முன் உண்டவை நொறுங்க-அதாவது ஜீரணமாக, அதனை அறிநது பின் தின்றால் நூறிலும் சாவில்லை, அல்லது நோயற்றுப்போம" என்று கொள்வது சிறந்ததாகும். கடின ஆகாரததை நொறுக்கியும், மெல்லியவற்றை நொறுக்காமலும் வேறு சிலவற்றை வெவ்வேறு பக்குவங்கள் செய்தும ஜீரணிக்கத் தக்கவிதமாக உட்கொள்ளவேண்டும். அங்ஙனம் உட்கொள்ளும்போது அவை நாவிலும் ஜீரணப்பையினுள்ளும் சுரக்கும் அமுதத்தால ஜீரணிக்கின்றன. இவ்வாறு ஜீரணமாகத்தகக பக்குவஞ்செய்தே ஆகாரத்தை உபயோகிக்கவேண்டுமெனபதை "நீரைக் கருக்கி நெய்யை உருக்கிப் பாலைச்சுருக்கி மோரைப் பெருக்கி உண்ணவேண்டும்" என்று நம் முதியோர் கூறி யிருப்பதாலு முணரலாம்.

நம் புலவர் பெருமானும் திருக்குறளில் 'மருந்து' என்னும் அதிகாரத்தினுள்,

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்."

---

* கள்ளப்பசியென வொன்றுண்டு.

"அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு."
"அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப்ப சித்து"

என்ற செய்யுட்களால் இக்கருத்தினை விளக்கி யிருக்கின்றார்.

ரதுநாத சிவம். Alton Clup, Ceylon.

---

## நடுவெழுத்தலங்காரம்.

ஆதியிலோ ரிராகப்பேர் மகளிர் தங்கள்
அவயவத்தி னொன்றின்பே ரானூர் திப்பேர்
தீதகலோ ரெண்ணின்பேர் இருக்கில் லான்பேர்
செப்பரிய நூதனப்பேர் சினத்தின் பேரும்
ஓதிடவே நடுவெழுத்தா லுதித்தான் மாது
ஒன்பதுட னிருவயதா யுலவி வாராள்
காதலியோ வுலகில்மிகக் களிப்பே செய்வாள்
கற்றவரே யிவளாரோ கழறு வீரே.

இங்ஙனம்,

A. மருதாசல முதலியார், தமிழ்ப்புலவர்-ஜோதிடம்.

ஊத்துக்குளி. (S.I.Ry.,)

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(295-ம் பக்கத் தொடர்ச்சி.)

சாம்பன் கூச்சலைக்கேட்ட அமிர்தம்மாள் அங்கு வந்தாள். அதற்குள் சாம்பன் தட்டித் தடுமாறிக்கொண்டு மெதுவாய்க் கரையேறினன். அமிர் தம்மாள் அங்குவந்து கரையில் நின்ற மனிதனைக் கண்டதே படகில் சினேகிதமான மனிதன் என்று தெரிந்துகொண்டு புன்சிரிப்போடு "ஆ தாங்களா! வாருங்கள் வாருங்கள்! ஏது எதிர்பாராதகாலத்தில்...!" என்றாள்.

இதைக்கண்ட சாம்பன் வியப்பும் பயமுமடைந்து "அம்மா! இவர் தங்கள் நண்பரா?" என்றான். அம்மாது "ஆம். இவர் எனது நண்பராகிய ஒரு பெரிய மனிதர்" என்றாள்.

உடனே சாம்பன் "அய்யா! என்னைத் தூக்கிக் குட்டையில் போடும்படி தங்களுக்குச் சிரமங்கொடுத்ததற்காக என்னை மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறேன்" என்றான. இதைக்கேட்டதே யம்மாது மிக்க வியப்படைந்து,

"என்னசங்கதி? சாம்பா! குட்டையில் தூக்கி எறிவதா?" என்றாள்.

சாம்பன்:—"ஆம் அம்மா! இவர் மிக்க சாமர்த்தியமாய் என்னை யொருதரம் அந்த அகழியிலும் ஒருதரம் இக்குட்டையிலும் தூக்கியெறிந்தார்" என்றான்.

அம்மாது:—“ஏன்? என்ன சங்கதி நடந்தது?” என்றாள்.

அதன்மேல் சாம்பன், தான் இம்மனிதனை அந்த நாடோடியென்று தவறாய் எண்ணித் தாக்கியதும் பிறகு நடந்த சங்கதிகளும் விவரமாய்க் கூறினான்.

அம்மாது கலகலவென்று நகைத்து, “பேஷ் நண்பரே! நீர் நல்ல சந்தர்ப்பத்தில் இங்கு வந்தீர்” என்றாள்.

ஆனந்தவிங் சாம்பனைநோக்கி “இது தவறாய் நடந்ததென்று தெரிகிறவரையும் நான் உன்னை யம்மாதிரி நடத்தியதற்காக மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன்” என்றான்.

சாம்பன்:—“இல்லை யில்லை; தவறு நடந்தது என்னால். ஆதலால் தாங்களே யென்னை மன்னிக்கவேண்டும்” என்றான்.

அமிர்தம்மாள்:—“போனதுபோகட்டும். கடைசியில் எல்லாம் சந்தோஷமாய் முடிந்ததே போதும்” என்றாள்.

ஆனந்த:—“மாலைப்போது நல்ல ஆரோக்யமா யிருந்தபடியால் உலவிக்கொண்டே நெடுந்தூரம் வந்துவிட்டேன். பிறகு இக்கட்டிடத்தைக் கண்டபோது தாங்கள் கூறிய அடையாளங்க ளனைத்தும் சரியா யிருக்கவே இதுவாய்த்தா னிருக்கவேண்டுமென்று சந்தேகித்து அருகில் வந்தேன். திடீலென்று இச்சம்பவம் நேர்ந்தது” என்றான்.

அமிர்தம்மாள் முன்பு ஒரு நாடோடி குழாயில் ஜலமருந்தவந்ததையும் மற்ற விஷயங்களையும் இக்குழப்பத்திற்குக் காரணமாகக்கூறிக் கடைசியில் அவனை வீட்டிற்குள் வரும்படி யழைத்தாள்.

ஆனந்தவிங் மரியாதையாய் “இச்சமயம் நான் இங்குவரக் கருதவில்லையாகையால் இன்னொரு சமயம் வருகிறேன்” என்றான். அச்சமயம் வானம் இருண்டு தூரத்தில் இடிமுழக்கம் கேட்டது.

அமிர்தம்மாள்:—“இதோ, காற்று மழையும் எனக்குத் துணையாய்ப் பேசுகின்றன. தாங்கள் இங்கு தங்கித்தான் செல்லவேண்டும்.” என்றாள்.

ஆனந்.—நகரம் மூன்றுமைல்தான் இருக்கிறது.

அமிர்:—“மூன்றுமைல் போவதற்குள் மழை நன்றாய்த் தேகமுழுதும் நனைத்துவிடும்” என்றாள்.

அதற்குச்சரியாய் உடனே மழை பெரிய பெரிய தூறல்களாய்ப் பெய்ய ஆரம்பித்தது. மின்னலும் இடியுமாய் ஆரம்பித்துவிட்டது. ஆகையால் ஆனந்தவிங் அம்மாதோடு வீட்டிற்குள் சென்றான்.

சற்றுநேரங்கழித்து ஆனந்தவிங் அம்பாலிகைக்கு அறிமுகமாக்கி வைக்கப்பட்டான். அம்பாலிகை யிவன் முகத்தை புற்றுநோக்கியதே, அவள் மனதில் மிக்க வியப்பும் கலவரமும் உண்டாய்விட்டன. ஆனந்தவிங் அதையுணர்ந்து காரணமறியாமல் கலவரமடைந்தான். ஆனால் சற்றுநேரத்திற்குள் அக்காரணம் ஆச்சரியமானவிதமாய் வெளியாயிற்று.

அமிர்தம்மாள் கூறியபடி காற்றும் மழையும் மின்னலும் இடியும் மிக்க மும்முரமாய் வந்துவிட்டன. அறைக்குள் ஒருமின்னல் நுழைந்து அவர்களைப் பிரமிக்கச்செய்தது. அமிர்தம்மாள் அம்பாலிகையின் முகத்தில் உண்டான பீதியையும் கலவரத்தையும் கண்டு "ஏன் குழந்தாய்! ஏன் இப்படிக் கலவரமடைந்தவள்போ லிருக்கிறாய்?" என்றாள்.

அம்பாலிகை:—"அப்பா இந்த இடியும் மின்னலும் பயமாயிருக்கின்றன" என்றாள்.

அமிர்தம்மாள் "ஓகோகோ! இடிமின்னலுக்கா பயந்துவிட்டாய்! இதோ சாளரங்களையெல்லாம் மூடிவிடுகிறேன்" என்று எல்லாச் சாளரங்களையும் மூடிவிட்டாள். அதற்குள் மழை யின்னும் அதிகமாகவே, அம்மாது "மேல் மாடியிலுள்ள சாளரங்கள் கதவுகள் யாவும் சரியாய் மூடப்பட்டிருக்கின்றனவாவென்று பார்த்துவருகிறேன்" என்று கூறிக்கொண்டே அறையை விட்டுச்சென்றாள். அம்பாலிகை இடிமின்னலுக்குப் பயப்படுவதாய்க் கூறியதுமட்டும் பொய்யென்று ஆனந்தவின் மனதிற்பட்டது.

அமிர்தம்மாள் அறையைவிட்டுச் சென்றதே, அம்பாலிகை தன் அழகியகரத்தை யானந்தவின் தோள்மேல் வைத்து,

"நீ மிக்க தைரியமான மனிதன். என்னத்திற்காக இங்குவந்தாய்?உன் கருத்துத்தான் என்ன? நான் உன்னை யறிந்துகொண்டேன்" என்றாள்.

ஆனந்:—"நான் யாரென்று தெரிந்துகொண்டாய்?" என்றான்

அம்பாலிகை:—"சில நிமிடங்களுக்குமுன் என்னிடம் அதிசயமானவிதமாய்ப் பேசிய அதே நாடோடிதான் நீயென்று கண்டுகொண்டேன்" என்றாள்.

ஆன:—"ஏனம்மா? நான் நாடோடியைப்போலவா காணப்படுகிறேன்? கடவுளே! இத்தகைய எண்ணம் உன் மனதில் எப்படியுதித்தது?"என்றான்.

அம்பாலிகை:—"நீ மறைக்கப் பார்ப்பதில் பிரயோசனமில்லை. உன் கண்களால் நான் உன்னை யறிந்துகொண்டேன். நீ ஏதோ ஒரு கருத்தைக்கொண்டே யிங்கு வந்திருக்கிறாய்" என்றாள்,

ஆனந்:—நான் என்ன எண்ணங்கொண்டு வந்திருப்பேன்?

அம்பா:—அதையே நான் கேட்கிறேன். அதைக் கூறிவிடு. இன்றேல் நான் உன்னை வெளியிட்டுவிடுவேன்.

ஆனந்தவின் உறுதியான குரலோடு, "அம்பாலிகை! நான் ஒரு வேலையாகவே யிங்கு வந்திருக்கிறேன். ஆனால் உனக்குச் சினேகனாகவே உதவிசெய்ய வந்திருக்கிறேன்" என்றான்.

அம்பாலிகை:—"எனக்குச் சினேகிதனாகவா? இம்மாதிரி ஆச்சரியமான விதமாய் ஒருநிமிடம் நாடோடிபோலவும் மறுநிமிடம் ஒருபெரிய மனிதன்போலவும் இந்திரஜாலம்போல் மாறுவேட மணிந்துகொள்ளும் அவ்வளவு சாமார்த்தியமுடைய சினேகிதர் எனக்கு யாருமில்லையே" என்றாள்.

(தொடரும்.) ஆரணி-குப்புசாமி முதலியார்.

தென் ஆபிரிக்கா சுதேசிகள்:—இந்தியாவில் 200 தென்னுப்பிரிக்க ஐரோப்பியரே இருக்கின்றனர். தென்னுப்பிரிக்காவில 160000 இந்தியர்கள் இருக்கின்றனர் அதில் டிரான்ஸ்வாலில் 12000 இந்தியர்களும், கேப்காலனியில் 8000 இந்தியர்களும், ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டில் 200 இந்தியர்களும், நெட்டாலில 140000 இந்தியர்களும் இருக்கின்றனர் இவர்களில் 20 அல்லது முப்பது ஆயிரம இந்தியாகள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றனா இவாகள் காய்கறிகளையும், பழங்களையும். கரும்பையும் விளைவித்து வருகின்றார்கள் 10000 பேர சிறு கடைகளை வைத்திருக்கின்றனர். மற்றவர்கள் தொழில்செயது வருகின்றனர். 8000 பேர்கள் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்து வருகின்றனர். டிரான்ஸ்வாலுக்குக் கொண்டு வந்த சீனர்களை அடக்கியாள முடியாததால் ஒப்பந்தகால முடிந்ததும் அவர்கள் திரும்பிப் போய்விட்டனர். 12½ லக்ஷம் வெள்ளையர்களும், 60 லக்ஷம் (தென் ஆபிரிக்க) சுதேசிகளும் அங்கிருக்கின்றனர் என்று தென் ஆபிரிக்காத் தூதுவர்கள் கூறுகிறார்கள்.

யானைமுகமுள்ள குழந்தை:—திருவாங்கூருக்குச் சமீபத்திலுள்ள அரக்காவில் என்னுமிடத்தில் ஒரு பெண் யானைமுகமுள்ள ஒரு குழந்தையைப் பெற்றிருக்கின்றனளாம்.

* * * * * *

ஜர்மனியில் ஓடும் ரயில் வண்டியில் கம்பியில்லா டெலிபோன் பேசக் கண்டுபிடித்து விட்டார்கள். சென்ற மாதம் 5௳ அது பரீக்ஷை பார்க்கப்பட்டது. 60 மைல் வேகத்தில் போகக்கூடிய சப்தத்திலும் டெலிபோனில் சப்தம் நன்றாய்க் கேட்கப்படுகிறது. 3 நிமிஷம் பேசுகிறவர்கள் 5-30 மாாக்குகள் கட்டணம் கொடுக்க வேண்டுமாம.

இமயகிரிச் சிகரப் பிரயாணம்.—பிரெஞ்சு ஆகாயப் படை வீரரான காயிச்சா எனபவர் ஐநூறு குதிரைப் பெலமுள்ள ஆகாயக் கப்பலுடன் இமயமலையின் சிகரமான எவரஸ்டுமீது ஏறுவதற்காக அடுத்த மார்ச்சு மாதம் வரப்போகின்றாராம். இமயமலை உச்சியில் பிரெஞ்சுக கொடியை நாட்டிவிடலாமென்று அவர் உறுதியாக இருககிறாராம்.

உணவின்றி ஜீவித்திருக்கும் விநோதம். ஒரு யோகி 40 நாளில் மீண்டும் வெளிபபடுவதாக அடங்கினார்:—ஸ்ரீமத் சிவப்பிரகாச சுவாமிகளின் சிஷ்யரும், ஸ்ரீ வில்லிபுத்தூர் கீழப்பட்டித் தெருவில் வசிப்பவரும், சேணிய வகுப்பைச் சார்ந்தவரும் 30 வயதுள்ளவருமாகிய "சுவாமியப்பர்" என்பவர், தமது யோக முதிர்ச்சியாலும், குருவின் தீர்க்க தரிசனததாலும் பிப்ரவரிமீ 1௳ பகல் 12 மணிக்குப் பூமிககுள் அடஙகி, 40 நாட்களுக்குப் பின் மீண்டும் வெளிப்படுவெதாக விளமபரப்படுத்தி அதன்படி தம் வீட்டிலேயே பூமியில் அமைக்கப்பட்டிருந்த 2½ கஜநீளமும், 1¼ கஜ அகலமும், 1¼ கஜ ஆழமுமுள்ள சமாதியறையில் இறங்கி அங்கு வைககப்பட்டிருந்த குருவின் படத்திற்குச் சூட தீபாராதனை நடத்தி அதன்முன் யோகத் தமர்ந்து அச்சமாதியறையை மூடும்படி சைகை செய்தனர். உடனே அவர் மனைவியும் சிஷ்யர்களும அவ்வறையைப் பலகையால் மூடி அதன்மேல் ½ அடி மண்ணைப் பரப்பி அதன்மேல சுண்ணும்புக் கட்டிடம் கட்டி விட்டனர். எண்ணிறந்த ஜனஙகள் அங்கே கூடி இவ்வடக்கத்தினைக் கண்டு அதிசயித்தனர். (40 தினங்களும் சென்ற பின் இவர் வெளிப்படுவதை உணரப் பலரும் ஆவலுள்ளவர்களாயிருக்கிறார்கள்) இவ் வர்த்தமானம் இந்துப் பத்திரிகையில் வெளி வந்துளது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

குரோதன வருஷ பங்குனி மாதம்—கலியுகாதி 5027, சாலிவாகனம் 1845,
பசலி 1335—கோல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1344,
இங்கிலீஷ் 1926வரு மார்ச்மாதம்—1926வரு ஏப்ரல்மாதம்

| பங்குனி | மார்ச்சு | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | ஞா | அமா6-13 பிர58-0 | பூரம்19-3 | சி19-3அ | அதிக சைத்திர சுத்தம், சம்பத் கௌரிவிரதம் |
| 2 | 15 | திங் | துதி50-35 | உத்12-50 | சித்60 | சந்திர தரிசனம் |
| 3 | 16 | செவ் | திரி44-23 | ரேவ7-33 | சித்60 | யாத்திரை விலக்க [க்க |
| 4 | 17 | புத | சது40-8 | அஸ்3-50 | ம3 50சி | மாடுவாங்க, அடுப்பு வை |
| 5 | 18 | வியா | பஞ்37-40 | ப.✻.1-53 | சி1-53ம | கிருத்திகை விரதம் |
| 6 | 19 | வெ | சஷ்37-25 | கிரு-2-0 | சி2-0ம | கரிநாள், சஷ்டி |
| 7 | 20 | சனி | சப்39-25 | ரோ4-18 | அ4-18சி | யாத்திரைசெய்ய |
| 8 | 21 | ஞா | அ43-20 | மிரு8-43 | சித்60 | மேஷாயனம் 20-35 |
| 9 | 22 | திங் | நவ48-45 | திரு14-40 | சி14 40அ | வியாதியஸ்தர் குளிக்க |
| 10 | 23 | செவ் | தச55-10 | புன21-50 | சித்60 | ஸ்மார்த்த ஏகாதசி |
| 11 | 24 | புத | ஏகா60 | பூசம்29-43 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 12 | 25 | வியா | ஏ1-48 | ஆயி37-35 | சி37-35அ | பிரதோஷம் [ஏழுத |
| 13 | 26 | வெ | து8-23 | மகம45-5 | ம45-5சி | ஆயுதம் பயிற்ற சித்திரம் |
| 14 | 27 | சனி | திர14-18 | பூரம51-45 | சி51-45ம | பௌர்ணமி பங்குனி உத் |
| 15 | 28 | ஞா | ச○19-15 | உத57-28 | அமி60 | திருதினஸ்பிருக [திரம் |
| 16 | 29 | திங் | பவு23 15 | அஸ்60 | சித்60 | |
| 17 | 30 | செவ் | பிர26-10 | அஸ்2-15 | சித்60 | |
| 18 | 31 | புத | து28-0 | சித்5-55 | சித்60 | |
| 19 | 1926வரு ஏப்ரல் 1 | வியா | திரி28-53 | சுவா8-35 | அ8-35சி | |
| 20 | 2 | வெ | சது28-45 | விசா10-25 | சித்60 | |
| 21 | 3 | சனி | பஞ்27-35 | அனு11-13 | சித்60 | |
| 22 | 4 | ஞா | சஷ்25-33 | கேட்11 8 | சி11 8அ | |
| 23 | 5 | திங் | சப்22-30 | மூலம்10-5 | சி10-5ம | |
| 24 | 6 | செவ் | அ18-17 | பூரா7-58 | சி7-58அ | |
| 25 | 7 | புத | நவ13-13 | உத4-53 | அ4-53சி | |
| 26 | 8 | வியா | தச7-13 | திரு0-53 அவி56-5 | சி56-5ம | அவமாகம், மாடுவாங்க |
| 27 | 9 | வெ | ஏகா0-23 து53-3 | சதை50-38 | சித்60 | மத்வ சர்வ ஏகாதசி அவமாகம் [சிவராத்திரி |
| 28 | 10 | சனி | திர45-30 | பூரட்45-0 | சி45-0சி | சனிபபிரதோஷம், மாச |
| 29 | 11 | ஞா | சது38-5 | உத்39-28 | அமி60 | |
| 30 | 12 | திங் | ●31-0 | ரேவ34-28 | சித்60 | சர்வத்திர அமாவாசை |
| 1 | 13 | செ | பிர24-58 | அஸ்30-20 | சித60 | அக்ஷய வருஷப் பிறப்பு, யுகாதி பண்டிகை, நிஜ சைத்திர சுத்தம் |

| | | | |
|---|---|---|---|
| சூரி புத | | | ரா |
| | 15உ கும்-சுக் | | |
| குரு செ சுக் | | | |
| கே | சனி | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.